# ஸ்ரீராமாநுஜன் 129.

ஆசிரியர்: காஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச்சந்தா ரூ. 5.



1959௵ செப்டம்பர்௴ விகாரி௵ புரட்டாசி௴

# ஸ்ரீ ராமாநுஜன் 129

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் மூலமாக
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை
ஆசிரியர் : ஸ்ரீகாஞ்சி. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 11 | 1959ஹு ஸெப்டம்பர்மீ<br>விகாரிஹு புரட்டாசிமீ | மலர் 9 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி 21.

முடியார் திருமலையில் மூண்டுநின்ற மாறன் *
அடிவாரந்தன்னி லழகர்—வடிவழகைப்
பற்றி * முடியுமடியும் படிகலனும்*
முற்று மனுபவித்தான் முன்.

முடி ஆர் திரு மலையில் } கொடுமுடிகள் நிறைந்த திருமாலிருஞ் சோலை மலையில்
மூண்டு நின்ற மாறன் } அவகாஹித்து அனுபவித்த ஆழ்வார்
அடிவாரம் தன்னில்—திருத்தாழ்வரையில்
அழகர் வடிவு அழகை பற்றி } அழகருடைய திவ்ய மங்கள விக்ரஹ ஸௌந்தரியத்தைப்பற்றி

முடியும் —திருவபிஷேகமும்
அடியும் —திருவடிச் சிலம்பும்
படி கலனும் —திருமேனியிலுள்ள மற்ற ஆபரணங்களுமாகிய
முற்றும் —முழுமையும்
முன் அனுபவித்தான்—முற்காலத்தில் அனுபவித்தார்.

* * * கிளரொளி யிளமை யென்கிற கீழ்த்திருவாய்மொழியினால் திருமாலிருஞ் சோலை மலையில் ஈடுபாடு கொண்டிருந்த ஆழ்வார் அத் திருமலையில் அடிவாரத்திலே கோயில் கொண்டெழுந்தருளியுள்ள அழகருடைய வடிவழகிலேயூன்றி திவ்யாவயவ திவ்ய பூஷணங்களை நன்கு அநுபவித்து அருளிச்செய்த பதிகம் * முடிச்சோதியாயென்னுமிது என்றதாயிற்று.

கீழ்த் திருவாய்மொழியைத் தலைக்கட்டுமிடத்தில் ஆழ்வார் "பொருளென்றிவ்வுலகம் படைத்தவன் புகழ்மேல் மருளில் வண்குருகூர் வண் சடகோபன்" என்று தம்மைப்பற்றிச் சொல்லிக்கொண்டார்; அதாவது எம்பெருமான்விஷயத்தில் தமக்கு அஜ்ஞானம் ஒன்றுமில்லை யென்பதாகச் சொல்லிக்கொண்டார். இப்போது பாசுரம் தொடங்கும்போதே தமக்கு ஒரு அஜ்ஞானம் உள்ளதென்று காட்டுகிறார். கேண்மின் :—

அஜ்ஞானம் நான்கு வகைப்படும்:— ஒரு வஸ்துவைப்பற்றி அடியோடு தெரிந்து கொள்ளாமையும், நிச்சயமாகத் தெரிந்துகொள்ளாமல் ஸந்தேஹமாகத் தெரிந்துகொள்ளுதலும், விபரீதமாகவே நிச்சயித்துத் தெரிந்துகொள்ளுதலும், உள்ளபடி தெரிந்துகொண்டதை மறந்து போதலும்—ஆக நால்வகைப்பட்ட அஜ்ஞானங்களுள் ஸந்தேஹரூபமான அஜ்ஞானம் தமக்குளதென்பதை இங்குக் காட்டிக்கொள்கிறாராழ்வார். கீழே தமக்கு மருள் இல்லையென்று சொல்லிவிட்டு இப்போது மருள் உள்ளதாகச் சொல்வது பொருந்துமோ எனின்; நம்போல்வார்க்குக் கருமம் காரணமாக வுண்டாகின்ற மருள் ஆழ்வார்தமக்கு இல்லை என்றதத்தை

யொழிய, விஷய வைலக்ஷண்யத்தினால் வருகிற அஜ்ஞானமும் இல்லையென்றதன்று. எம்பெருமானுடைய வடிவழகிலே யீடுபட்டு 'பிரானே! உனது முகச்சோதியே முடிச்சோதியாய் மலர்ந்ததுவோ? திருவடியின் சோதியே நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ?' என்று கேட்பதற்குறுப்பான ஸந்தேஹம் ஆழ்வார்க்கு விளைந்ததென்றால் இந்த அஜ்ஞானம் புருஷார்த்த கோடியில் சேருவதாகுமன்றோ. "ஜ்ஞாந விபாக கார்யமான அஜ்ஞானத்தாலே வருமவையெல்லாம் அடிக்கழஞ்சு பெறும்" என்கிற ஸ்ரீ வசநபூஷண ஸ்ரீஸூக்தியும் காண்க. நம்முடைய அஜ்ஞானம்போலன்றிக்கே இப்படி மிகவும் விலக்ஷணமான அஜ்ஞானம் ஆழ்வார்களுக்கு உண்டாவதே அவர்களுடைய சிறப்புக்குக் காரணமாக நிற்கும். விலக்ஷண விஷயத்திலேகலக்கங்கொள்ளாதே தெளிந்தே நிற்பார்களாகில் அவர்களுக்கு ஏற்றமில்லையாகுமே.

கீழ்த்திருவாய்மொழியில் திருமாலிருஞ்சோலைமலையை அநுபவித்த ஆழ்வார் அந்தத் திருமலையில் ஏகதேச மென்னலாம்படியாய், கற்பகத்தரு கப்புங்கிளையுமாகப் பணைத்துப் பூத்தாற்போலே நிற்பவரான அழகருடைய வடிவழகை யனுபவித்து, வேதங்களும் வைதிகர்களும் ப்ரஹ்மருத்ராதி தேவர்களுங்கூட நிலையிடமாட்டாதபடி யிருக்கிற விருப்பை அநுஸந்தித்து இனியரானார் இத்திருவாய்மொழியில். ... .... .... (21)

# அன்பர்களுக்கு அறிவிப்பு.

1. நமது ஸ்ரீராமாநுஜனுக்குப் பதினோராமாண்டு நிறையப்போகிறது. ஸ்ரீவைஷ்ணவவுலகுக்கு இதுவரையில் செய்துவந்த ஸேவை ஏகதேச மென்னும்படி இனிமேல் மிகவதிகமான ஸேவையைச் செய்ய வேணுமென்று குதூஹலமும் உத்ஸாஹமும் கொண்டிருக்கின்ற ஸ்ரீராமாநுஜனை அன்பர்களனைவரும் விசேஷித்து ஆதரிக்க வேணும். உலகில் பத்திரிகைகள் நடத்துமவர்கள் இருவகையான கோரிக்கையைச் செய்வதுண்டு; கட்டுரைகள் எழுதியனுப்பி உபகரிக்க வேணுமென்பது ஒன்று; சந்தாத் தொகை செலுத்த வேணுமென்பது மற்றொன்று. இவ்விருவகையான கோரிக்கைகளில் முதல் கோரிக்கையை நாம் என்றும் செய்ததில்லை, இனியும் செய்யப்போவதில்லை. இரண்டாவது கோரிக்கையையும் செய்யாமலிருக்க வேணுமென்பதே நமது உண்மையான ஆசை. நாம் மடாதிபதியாக இருந்தால் அவ்வாசையை நிறைவேற்றிக்கொள்ள முடியும். அங்ஙனே யுள்ளவர்கள் இத்தகைய லோகோபகார க்ருத்யங்களில் உதாஸீநர்களாகக் காணப்படுகிறார்கள். அகிஞ்சநர்களான எம் போல்வார்க்கே இத்தகைய பணிகளில் ப்ரேமம் கனத்து வளர்கின்றது. ஆகவே அவரவர்கள் சந்தா பாக்கியை விரைவில் அனுப்பவேணுமென்று வேண்டிக் கொள்ள வேண்டியதாகிறது.

2. நமது க்ரந்தமாலையாபீஸின் புத்தககியாடலாகுகளை அவரவர்கள் வரவழைத்துப் பார்த்து வேண்டிய புத்தகங்களுக்கு ஆர்டர் செய்ய வேணும். தமிழ், ஸம்ஸ்க்ருதம், தெலுங்கு ஹிந்தி பாஷைகளில் ஸ்ரீவைஷ்ணவஸம்பிரதாயத்திற்கு இன்றியமையாத புத்தகங்கள் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தி ரூபங்களாயும் அவற்றுக்கு வியாக்கியான ரூபங்களாயும் உபந்யாஸ ரூபங்களாயும் மற்றும் பலவகைப்பட்டு மிருக்கின்றன. இவற்றில் 50 ரூ. விலையுள்ள புத்தகங்களை வாங்குமவர்களை ஸ்ரீராமாநுஜனுக்கு ஒருவருஷச் சந்தா செலுத்தினவர்களாகக் கொண்டு அன்னவர்களுக்கும் பத்திரிகை அனுப்பிவருவோம்.

3. ஸ்ரீராமாநுஜனில் கம்பரின்பக்கவித்திரட்டு இரண்டு வருடங்களுக்கு முன்பு பிரசுரம் செய்யத்தொடங்கப்பட்டு (செ. 101-க்குப்பிறகு) பிரசுரம் செய்யப்படாமல் நின்றிருக்கின்றது. அதனைப்பூர்த்தி செய்ய எடுத்துக்கொண்டோம். அடுத்த தைமாதத்திற்குள் இது பூர்த்தியாகிவிடும். தேசிகப் பிரபந்தவுரையும் பதிப்பிக்கத் தொடங்கி அம்ருத ரஞ்சனியுரை முடிவு பெற்று அதிகாரசங்கிரகவுரை ஸசேஷமாயிருக்கின்றது. அதுவும் விரைவில் பூர்த்தி பெறும்.

ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

விஹாரிஸூ ஆவணித்திங்களில்
ஸ்ரீஜயந்திமஹோத்ஸவத்தின் சாச்வத நினைவுமலராக

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்
எழுதிய

# ஸ்ரீ ஜயந்தியநுபவம்

ஸ்ரீ ராமாநுஜன் வெளியீடு

சென்னை குமரன் அச்சகத்தில் பதிப்பிக்கப்பட்டது

கிடைக்குமிடம்:
க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்.

இதன் விலை 1 ரூபாய்

1959



ஸ்ரீ P. B. அண்ணங்கராசாரியர்

(திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையுரை எழுதத்தொடங்கிய பிராயத்தின் உருவப்படம்)

# ஸ்ரீஜயந்தியநுபவம்—இரண்டாவது பரிச்சேதம்

கண்ணபிரான் திறத்து ஆழ்வார்களின் அநுபவத்தைத் தலையாகக் கொண்டு முன்பரிச்சேதம் நிகழ்ந்தது. ஆசாரியர்களின் அநுபவப்ரகாரங்களை இவ்விரண்டாம் பரிச்சேதத்தினால் வெளியிடுகிறோம். கூரத்தாழ்வான் பட்டர் தேசிகன் பிள்ளைப்பெருமாளையங்கார் ஆகிய இவ்வாரியர்களின் கிருஷ்ண சேஷ்டிதாநுபவப்ரகாரங்களைப் பேசுவோம். கூரத்தாழவான் யமகரத்நாகர மென்று ஒரு பெரியக்ரந்தம் அருளிச்செய்திருப்பதாக ஐம்பது வருஷங்களுக்கு முன் தெலுங்குலிபியில் அச்சாகி வெளிவந்திருக்கின்றது. அவரே இயற்றியதாக வியாக்கியானமும் கூடவே வெளிவந்திருக்கின்றது. அதில் கிருஷ்ணசேஷ்டிதா நுபவங்கள் அற்புதமாயுள்ளன. ஆனால் அந்த கிரந்தம் ஆழ்வானருளிச் செய்த தென்பதில் பெரியார்களின் ஸம்ப்ரதிபத்தி இல்லாமையாலே அதனை விட்டிட்டு, அவருடைய ஸ்தவங்களைக் கொள்ளுகிறோம்.

பஞ்சஸ்தவத்தில் முதல்ஸ்தவமான ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்திலும் முடிவு ஸ்தவமான ஸ்ரீஸ்தவத்திலும் தவிர, அதிமாநுஷஸ்தவம் ஸுந்தரபாஹுஸ்தவம் வரதராஜஸ்தவம் என்கிறமற்றை மூன்றுஸ்தவங்களிலும் ஸ்ரீக்ருஷ்ணவதாரகுண சேஷ்டிதாநுபவம் மிக மேம்பட்டுள்ளது. அதிமாநுஷஸ்தவத்தில் முப்பத்து மூன்று ச்லோகமளவும் நரஸிம்ஹத்ரிவிக்ரம ராமாத்யவதாரங்களை யநுபவித்துப் போந்தார்; முப்பத்து நான்காவது சுலோகம் முதல் ஸ்தவம் முடிய [இருபத் தைந்து ச்லோகங்களில்] ஸ்ரீக்ருஷ்ணவதாராநுபவமே மிகவற்புதமாகவுள்ளது.

## அதிமாநுஷஸ்தவத்திலநுபவங்கள்

[34. "ஸா பூதநா சகடம்" என்னும் ச்லோகத்தில்] கண்ணபிரான் தொட்டில் பருவத்திலேயே செய்த சில சேஷ்டிதங்களை நினைந்து நைந்து உள் கரைந்துருகுகிறார். கம்ஸன், தன்னைக் கொல்லப்பிறந்த கண்ணபிரான் திரு வாய்ப்பாடியிலே ஒளித்துவளர்கிறானென்பதையறிந்து அந்த ஸ்ரீக்ருஷ்ண சிசுவை நாடியுணர்ந்து கொல்லும்பொருட்டுப் பல அஸுரர்களை ஏவ, அவர்களில் ஒருத்தியான பூதனை யென்னுமரக்கி நல்ல பெண்ணுருவத்தோடு [யசோதைப் பிராட்டியின் வேஷம் பூண்டு] நள்ளிரவில் நந்தகோபர் திருமாளிகையிலே புகுந்து அங்குத் தொட்டிலில் கண்வளராநின்ற க்ருஷ்ண சிசுவையெடுத்து நஞ்சு தீற்றிய தன் முலையைக் கொடுத்துக் கொல்ல முயல, பகவானான குழந்தை அவ் வரக்கியின் தனங்களைக் கைகளாலிறுகப்பிடித்துப் பாலுண்ணுகிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி முடித்திட்டான் என்பது ஒரு கதை: இப்படியே, வீட்டு வாசலிலே வைத்திருந்த சகடத்தின்மேலே ஒரு அஸுரன் வந்து ஆவேசித்து ஏணையில் சயனித்திருந்த கண்ணன்மேலே பாய்ந்து நலியப்புக, முலைப்பாலுக் காக அழுகிறபாவனையிலே சீற்றத்தினால் நிமிர்த்தப்பட்ட திருவடிகளினாலுதைத் தருள அந்தச் சகடம் முறிந்துவிழுந்து அஸுரனுட்பட அழிந்ததென்பது மற் றொரு கதை. கண்ணனுடைய தீம்புகளைப் பொறுக்கமாட்டாத யசோதை அவனை வயிற்றிலே கயிற்றினால் கட்டி ஓருரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலையுமிழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருதமரத்தின் நடுவே யெழுந்தருளியபொழுது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டத னாலே அம்மரங்களிரண்டும் முறிந்துவிழ, நளகூபரன் மணிக்ரீவ னென்னும் குபேரபுத்திரர்கள் நாரதசாபத்தாலே அம்மரங்களாகக் கிடந்ததுமல்லாமல் கம்ஸ னாலேவப்பட்ட அசுரர்களும் ஆவேசித்திருந்ததனால் அவர்களும் தொலைந்துபோன தாக மற்றொருகதை. இம்மூன்று கதைகளையும் ஒன்றுசேர்த்து அநுபவிக்கிறார்.

5

இந்த பூதநாசகடயமளார்ஜுநபங்கங்களுக்கென்று இதம்பரமாகத் தனியேயொரு காரியம் செய்தமையில்லை; பாலுண்கிறபாவனையிலே பூதனை யையும், பாலுக்காக அழுகிற பாவனையிலே சகடத்தையும், தவழ்ந்து செல்லுகிற பாவனையிலே இரட்டைமருதமரங்களையும் முடித்தானத்தனை. இவன் இளமைக் குச் சேர ஏதோ காரியங்கள் செய்ய, விளக்கிலே விட்டில்கள் தானாக விழுந்து மாயுமாபோலே இவனது அங்யபரசேஷ்டிதங்களிலே பூதநாதிகள் 'மாய்ந்து போன வுண்மையை யருளிச்செய்தார். இங்ஙனே அவலீலையாக விரோதி நிரஸ நம் செய்யவல்லவன் கம்ஸனுக்கு அஞ்சி ஒளித்து வளர்கிறானென்று பேர் பெற்றது ஒரு ஆச்சரியம்! என்றுசொல்லி முடிக்கிறார்.

[35. *பச்யந்ஸ ஸூரிஷு ஸதா] கண்ணா! ச்ரிய: பதியாய் நித்யஸூரிஸேவ் யனாய் யோகித்யேயனாயிருக்கிறவுனக்கு நவநீத சௌர்யமென்கிற இந்தகளவுத் தொழில் எதற்காக? *பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ்சோராமே யாள்கின்றவெம்பெருமானென்கிறபடியே உபயவிபூதி நிர்வாஹ ஸம்பத்ஸம்ருத்தனாய் நித்யஸூரிகள் கண்வட்டத்திலே *ஒண்டொடி யாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பவிருந்து அரசுபுரிகின்றவனான நீ யோகி களுக்கும் எட்டாதே தேடவேண்டியவனாயிருந்துகொண்டு ;ஆயர்மனைகளிலே புகுந்து வெண்ணெய் திருடினாயென்பது பொருத்தமாயில்லையே யென்கிறார்.

[36. *யம் துர்க்ரஹம் ஸுமநஸோ மநஸாபி.] வெண்ணெய் களவுகண்ட தோடும் நில்லாமல் அக்குற்றத்திற்காக உரலோடு கட்டுண்டுமிருந்து அக்கட்டை அவிழ்த்துக்கொள்ளவும் மாட்டாமல் விக்கிவிக்கியழுதாயென்று கேள்விப் படுகிறோம்; எப்படிப்பட்டவர்களின் மனதுக்கும் எட்டாதவனென்று பிரமாணங் களினாலோதப்படுகின்றநீ ஓர் அபலைகையிலே அகப்பட்டு நின்றதும், எல்லா ருடைய கருமபந்தங்களையும் அறுக்கவல்ல நீ பந்தமடைந்து கிடந்தாயென்பதும், ஸர்வசக்தனான நீ அந்த தாமபந்தத்தை அறுத்தெறியமாட்டாமல் அசக்தரைப் போலே அழுது ஏங்கிநின்றாயென்பதும் என்ன விசித்திரம்! என்ன மாயம்! என்கிறார்.

[38. ஸத்யேவ கவ்யநிவஹே] *அம்பரமே தண்ணீரே சோறேயறஞ் செய்யுமெம்பெருமானான நந்தகோபாலனுடைய திருமாளிகையிலே பிறந்து வைத்து, அங்கே வெண்ணெய் பால் தயிர் நெய்களுக்குக் குறையுண்டாய் பிறர்மனைகளிலே புக்குக் களவாடவேணுமோ? *வைத்த நெய்யும் காய்ந்த பாலும் வடிதயிரும் நறுவெண்ணெயும் இத்தனையும் பெற்றறியேனெம்பிரான் நீ பிறந்த பின்னை* என்று எசோதை சொல்லும்படி தன்னகத்திலேயுள்ள கவ்யமடங்கலும் புஜித்தும் அதில் பர்யாப்தி பிறவாதே அசலகங்களிலும் புக்குக் களவு செய்தது என்னோ? *வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு* என்றும் *மோரார் குடமுருட்டி* என்றும் சொல்லுகிறபடியே வெண்ணெய்க்கலத்தையுடைத்தும் மோர்க்குடத்தை யுருட்டியும் போந்தது என்னோ? *பானையில் பாலைப் பருகிப் பற்றாதாரெல்லாம் சிரிப்ப* என்றும் *வேயினன்ன தோள்மடவார் வெண்ணெயுண்டானிவனென்று ஏசநின்ற வெம்பெருமானென்றும் சொல்லுகிறபடியே ஆய்ச்சியர் சிரிக்க நின்றதுதா னென்னோ? என்கிறார்.

[39. *யந்நாம நாத! நவநீதம்] ஒரு நாள் ஒரிடத்திலே கண்ணன் வெண் ணெய்களவு செய்யா நிற்கச்செய்தே உடையவர்கள் வருகிற சுவடறிந்து கையது வாயதான வெண்ணெயை மறைத்திட வேணுமென்றெண்ணி வாயிலே யாவது கையிலேயாவது வெண்ணெயிருக்கக்கண்டாலன்றோ நம்முடைய

களவு வெளிப்படும்; கையிலும் வாயிலுமில்லாதபடி ஆக்கிவிடுவோம்' என்றெண்ணி வெண்ணெயை உடம்பெல்லாம் பூசிக்கொண்டு 'இனி நாம் யாருக்கும் அஞ்சவேண்டியதில்லை' என்று நிர்ப்பயனாய் வெளிப்புறப்பட்டனனும்; அந்த விநோத சேஷ்டிதத்தையநுஸந்தித்து 'என் நாயனே! இப்படியும் ஒரு மௌக்த்யமுண்டோ? நவநீதசௌர்யத்தை மறைக்க நினைத்து அது நன்கு வெளிப்படும்படியான காரியம் செய்தாயே; இது வஸ்துதः மௌக்த்யத்தாலோ? அல்லது மௌக்த்யபாவனையாலோ சொல்லாயென்கிறார்.

[40. *த்வாமந்யகோபக்ருஹகவ்யமுஷம்] கண்ணபிரான் நவநீத சௌர்யத்துக்காகக் கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்டுகிடந்தபடியை "மத்துறு கடை வெண்ணெய்களவினிலுரவிடையாப்புண்டு, எத்திறமுரலினோடிணைந்திருந்தேங்கிய வெளிவே!" என்று (திருவாய்மொழியில்) அநுஸந்தித்த நம்மாழ்வார் ஆறுமாதம் மோஹித்திருந்தாரந்தோ! என்றீடுபடுகிறாரிந்தச்லோகத்தில்; "தேநாத்ருக் சரிதம் ஆர்ய ஜநாः ந ஸஹந்தே" என்று இந்தச்லோகத்திலுள்ளதற்கு இதுவே பொருள். இதில் "த்வாம் தாமபரிணுமஜுஷா ப்ரேம்ணா பபந்த" என்றதும் இன்சுவைமிக்கது. அன்புதானே தாம்பாக வடிவெடுத்ததென்றும், அதனால் கட்டினானென்றும் தெரிவித்தபடி.

[41. *மாத்ரா யதி த்வமஸி*] பிரானே! "க்ருதப்ரதிக்ருதம் ஸர்வேபி தத் குர்வதே" என்றொரு நியாயமுண்டு; நன்மை செய்தார்க்கு நன்மை செய்கையும் தீமைசெய்தார்க்குத் தீமைசெய்கையும் க்ருதப்ரதிக்ருதமாம். உன்னைத் தாம்பாலே கட்டினவள் உன் தாய்; அதற்கு நீ ப்ரதிக்ரியை செய்ய விரும்பினால் அவளை நீ தாம்பாலே கட்டப்பார்ப்பது யுக்தமாகும்; அது செய்யமாட்டிற்றிலை; பின்னை என்செய்கின்றாயென்னில், அந்த அபதாநத்தைக்கேட்டு ஈடுபட்டுக் கண்ணும் கண்ணீருமாய்நிற்கிற ப்ரேமபரவசர்களினுடைய ஹ்ருதயத்தை யன்றோ நீ பந்திக்கிறாய்; ஆர்பக்கலிலே செய்யவேண்டியதை ஆர்பக்கலிலே செய்கிறாய்? என்கிறார். பக்தர்களின் ஹ்ருதயத்தை பந்திக்கையாவது—அந்த ஸௌசீல்யத்திலேயீடுபட்டு எத்திறம்! என்று நெஞ்சு பிணிப்புண்டிருக்கை.

[42. *காந்தாலகாந்தமமலம்*] இதில் கண்ணபிரானுடைய திருமுகமண்டலத்தை ஆச்சரியமாக வருணித்து, இப்படிப்பட்ட திருமுகமண்டலத்தையுடையையான நீ ஆயர்மனைகளிலேபுக்கு ஆய்ச்சிகளின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டாயோ? அன்றி வெண்ணெய்தான் கொண்டாயோ? என்று கேள்விகேட்கிறார். இதற்குக் கண்ணபிரானே விடைகூறவேணும்; இரண்டையுங்கொண்டேன் என்பனோ? இரண்டத்தொன்று கொண்டேன் என்பனோ? ஸுந்தரபாஹுஸ்தவத்திலும் இங்ஙனே கேள்விகேட்டிருக்கிறார் *ஸுந்தரோருபுஜ! நந்த நந்தந:* என்னும் சுலோகத்தினால்.

[44. *கோபால போதகதயா*] பிரானே! ஸௌலப்ய ஸௌசீல்யங்களையே காட்டி பரத்வத்தையொளித்து மநுஷ்யபாவனை கொண்டாடவந்தவிடத்திலே பரத்வமே பொலியும்படியான அதிமாநுஷக்ருத்யங்களையும் ஊடே வெளியிடலாமோ? *ஒருத்திமகனாய்ப் பிறந்து ஓரிரவி லொருத்தி மகனாயொளித்து வளர்ந்தது உன்னுடைய சக்தி விசேஷங்களையெல்லாம் மறைத்துக் கொண்டல்லவோ? அப்படியிருக்கும்போது "இந்திரனுக் கென்றாயர்களெடுத்த எழில் விழவில் பழநடை செய் மந்திரவிதி" என்னப்பட்ட இந்த்ரஸமாராதனையை விலக்கி மழைவந்தெழுநாள் பெய்யும்படி செய்வித்து ஆனையருமாநிரையுமலறும்படியும் செய்வித்துக் கோவர்த்தனமென்னுங் கொற்றக்குடையையேந்தி "கொடியேறு செந்தாமரைக் கைவிரல்கள் கோலமுமழிந்தில வாடிற்றில வடிவேறு

திருவுகிர் நொந்துமில" என்னும்படி வாடாதே வதங்காதே நின்றது என்னே வென்கிறார்.

[48. அம்போதநீலம்] *மழைகொலோவருகின்றது! என்னும்படி கண்டார் கண்குளிரும் நிறத்தனாய், இலங்கொளிசேரரவிந்தம் போன்று நீண்ட கண்ணனாய், கருங்கண்தோகைமயிற்பீலியணிந்தவனாய், இடவணரையிடத்தோளொடுசாய்த்து இருகைகூடப் புருவம் நெறிந்தேறக் குடவயிறுபட வாய்கடைகூடக் குழலூதுபவனாய், சிலைக்குதம்பையொருகாது ஒருகாது செந்நிற மேல் தோன்றிப்பூ கோலப்பணைக்கச்சுங் கூறையுடையும் குளிர்முத்தின் கோடாலமுமான கோபாலவேஷம் பொலிந்தவனான உன்னை, "காலிப்பின்னேவருகின்ற கடல்வண்ணன் வேடத்தை வந்துகாணீர்" என்று எசோதைப்பிராட்டியும், "என்று மிவனையொப்பாரை நங்காய் கண்டறியேன் ஏடி! வந்து காணாய்" என்று ஆய்ப்பெண்டுகளும் அழைத்துக்காட்ட, அக்காலத்தில் காணப்பெற்றவர்களன்றோ க்ருதார்த்தர்கள். பாக்யாதிசயத்தாலே அன்றிருந்து காணப்பெற்றார்கள்; தௌர்ப்பாக்யத்தாலே நாம் இன்றிருந்து இழந்தோமந்தோ! என்றாராயிற்று.

[49. *கோவர்த்தநோ கிரிவரோ யமுநா நதீ ஸா*] அக்காலத்தில் பிறவாதே இழந்தவர்களுக்கும் இப்போது ஒருவாறு நெஞ்சு தேறுவதற்கு வழியுண்டென்கிறார். *காலிகளுய்ய மழைதடுத்துக் கொற்றக்குடையாக வேந்திநின்ற கோவர்த்தனகிரியை இற்றைக்கும் காணப்பெறுகிறோம்; ஆய்ச்சிகளும் கண்ணபிரானுமாகத் திளைத்த தூயபெருநீர் யமுனைத்துறை அழிந்ததில்லையே; *இட்டமானபசுக்களை இனிது மறித்து நீரூட்டி விட்டுக்கொண்டு விளையாடின விருந்தாவனம் இன்றும் காணலாயிருந்ததே; மன்னு வட மதுரையும் மன்னியிருக்கப் பெற்றோமே; [பவச்சரண சாரஜுஷ: ப்ரதேசா ஏதே க்ருதிநாம் ஜநாநாம் அத்யாபி ஹந்த! ஸுலபா:] அவன் உலாவிப்போன அடிச்சுவடுகொண்டு தரிக்கவிருப்பார்க்கு அன்று அவனெடுத்த குன்றமும் பெண்களுடன் திளைத்த யமுனையும் வேட்டையாடி நின்ற விருந்தாவனமும் திருவவதரித்தவிடமான வடதிசை மதுரையுமுண்டாய்த்தேயென்கிறார்.

[50. ப்ருந்தாவநே ஸ்திரசராத்மக] அன்று ப்ருந்தாவனத்திலே ஜனித்திருந்த சேதநாசேதநங்கள் பலவுண்டே; அவற்றுள் ஏதேனுமொரு வஸ்துவாக அப்போது ஜனிக்கப்பெற்றிருந்தேனாகில் இன்று ஸம்ஸாரியாய்ப்பிறந்திருக்க நேர்ந்திராதே; அந்தோ! நல்லடிக்காலத்தைப் பாவியேனிழந்தொழிந்தேனே! ஸர்வஸ்வதானம் பண்ணின காலத்திலே யிழந்தபாவிகளுக்கு இனியொரு நல்லகாலமுண்டாகப்போகிறதோ? உன்திருவடிசேர இனி என்றைக்குப் ப்ராப்தியாமோவென்று முடிமேல் மோதிக்கொள்வதுபோல இந்த ச்லோகமமைந்துள்ளது.

[51. *ஹா ஜந்ம தாஸு ஸிகதாஸு*] ராஸக்ரீடையென்கிறகுரவைக்கூத்தினால் நெடும்போது விளையாடிப் பரமானந்த ரஸமாய்ச் சென்றவளவிலே இது ஸாத்மிக்க வேணுமென்று கண்ணபிரான் பெண்களைப் பிரிந்து மறைந்தகாலத்திலே விரஹம் தின்றவுடம்போடே பெண்கள் ஆற்றமாட்டாமே கண்ணனுலாவிப்போன அடிச்சுவடு பொருந்திய மணற்கொட்டகங்களிலே உடம்பையிட்டுப் புரண்டு ஒருவாறு ஆச்வஸித்தார்களென்று ப்ரஸித்தமானவொரு விருத்தாந்தத்தை யநுஸந்தித்து, அந்தோ! அந்த மணல்களிலே ஒரு மணலாகவாகிலும் பிறவாதொழிந்தேனே பாவியேனென்று வயிறு பிடிக்கிறாரிதில்.

[53. *யத் த்வத்ப்ரியம் ததிஹ புண்யமபுண்யமந்யத்*] கண்ணபிரானுடைய சரித்திரங்களை யநுஸந்திக்கும்போது "மச்சொடுமாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்குக் கச்சொடு பட்டைக்கிழித்துக் காம்புதுகிலவை கீறி நிச்சலுந் தீமைகள் செய்வாய்" என்றும் "தொத்தார்பூங்குழல் கன்னியொருத்தியைச் சோலைத்தடங்கொண்டுபுக்கு முத்தார்கொங்கை புணர்ந்திரா நாழிகை மூவேழு சென்றபின்வந்தாய்" என்றும் பலபல தூர்த்த சரித்திரங்களை யநுஸந்திக்க நேர்கின்றது. இவையெல்லாம் ஹேயதமங்களான சேஷ்டிதங்களன்றோவென்று சிலர் அருவருப்புக் கொள்ளக்கூடுமென்று கருதிய கூரத்தாழ்வான் இந்த ச்லோகத்தை வெகு அற்புதமாகவருளிச்செய்கிருர். புண்யமாவது என்ன? பாபமாவது என்ன? என்று உலகில் வித்வான்களைப் பரீக்ஷைசெய்தால் 'சாஸ்த்ரங்களில் செய்யத்தக்கதாக விதிக்கப்பட்ட கருமம் புண்யம்; செய்யத் தகாததாக மறுக்கப்பட்ட கருமம் பாபம்' என்றிவ்வளவே கூறுவர்கள். அது கிடக்க: இங்கு ஆழ்வானருளிச்செய்யும் அற்புதமான புண்ய பாபலக்ஷணம் கேளீர்; எம்பெருமான் திருவுள்ளத்திற்கு எது உகப்பானதோ அது புண்யமென்றும், எது வெறுப்பானதோ அது பாபமென்றும் இத்தனையே புண்யபாப லக்ஷணம் சொல்லலாவது. இத்தகைய லக்ஷண சிக்ஷையின்படி நோக்குமளவில் ப்ராக்ருதர்களினுடையமனத்தாலே தூர்த்தசேஷ்டிதங்களாகவும்ஆனதுபற்றிப்பாபமாகவும் கருதப்படுகின்ற க்ருஷ்ணசேஷ்டிதங்களெல்லாம் அவன் திருவுள்ளமுகந்தவையென்னுங் காரணத்தினுல் புண்யமேயாகும்.ஆகவே அவற்றின் கீர்த்தனம் பரமபாவனமென்று முடிந்தது. கீதையில் *ஜந்ம கர்ம ச மே திவ்யம்* என்று அவன்தானே சொல்லுகையாலே அவன் திருவுள்ளவுகப்பு நன்கறியப்படுமென்க.

[54. *யா கம்ஸ முக்ய ந்ருப கீட நிபர்ஹணேந்தா*] பகவானுடைய சரித்திரங்களை இருவகையாகப் பிரிக்கலாம்—வீர்யசரித்திரங்களென்றும் ஸௌசீல்ய சரித்திரங்களென்றும். கம்ஸசிசுபாலதுர்யோதநாதிகளை முடித்தவை வீர்ய சரித்திரங்கள்; கற்றினம் மேய்த்தது, காடுவாழ்சாதியாகப்பெற்றது, உரலிடையாப்புண்டது முதலானவை ஸௌசீல்யசரிதங்கள்; பகவத்கதைகளையநுபவிக்குமவர்கள் வாசி பாராதே எல்லாவற்றையும் ஒருங்கே யநுபவிப்பர்களாகிலும், கம்ஸவதம் முதலானவை மூவுலகங்களையும் வென்றிருக்கின்ற கண்ணபிரானுக்கு மசகமக்ஷிகாதி க்ஷுத்ரஜந்துக்களை நறுக்குவதுபோல் அவலீலையாகச் செய்யத்தக்கவையாதலால் அவன்றனக்கு அவை புகழ்ச்சியாகமாட்டா; *கன்றுமேய்த்தினிதுகந்த காளாய்* என்றால் இது நெஞ்சையுருக்குமாபோலே அவை உருக்கமாட்டாவன்றோ. திருப்பாவையில் *உன் தன்னைச் சிறு பேரழைத்தனவும்* என்றவிடத்து, நாராயணனென்பது சிறுபேரென்றும் கோபாலன் கோவிந்தனென்பது பெரியபேரென்றும் ஆசாரியர்கள் வியாக்கியானம் செய்தருளினதும் இங்கு நினைக்கத்தக்கது. .... .... .... .... *

## இனி ஸுந்தரபாஹுஸ்தவத்திலிருந்து அநுபவிப்போம்

ஸுந்தரபாஹுஸ்தவத்தில் மத்ஸ்யாவதாரம் முதலாகக் கல்கியவதாரமளவும் முப்பது சுலோகங்களினுல் அநுபவிக்கிருர். நூற்றேழாவது சுலோகம் முதல் நூற்றுப்பதினுரும் சுலோகமளவும் பத்து சுலோகங்கள் க்ருஷ்ணவதார சேஷ்டிதங்களை யநுபவிப்பன. இவற்றுக்கு முன்னே [விபவாவதாரப்ரஸ்தாவமில்லாதபோதே]. நாற்பத்தேழாம் ச்லோகத்தில் அழகருடைய திவ்ய கபோலங்களை யநுபவிக்கையில் ஸ்ரீக்ருஷ்ணநுபவம் தலையெடுத்து அருளிச்செய்யுமது அத்யந்தம் ஆகர்ஷகமாகவுள்ளது. [யசோதாங்குல்யக்ரோந்நமித சுபுகாக்ராண

முக்தைள கபோலாவத்யாபி ஹி அநுபரததத்புலகமகுலௌ விராஜேதே............வநகிரிபதேஸ் ஸுந்தரபுஜ:] அழகருடைய திருக்கபோலங்கள் மிகவிளங்குகின்றனவென்று பேசி, எங்ஙனே விளங்குகின்றனவென்பதை மூதலிக்குமிடத்து, பண்டு க்ருஷ்ணாவதாரத்தில் யசோதைப்பிராட்டி "என் குட்டனே! முத்தந்தா" என்று சொல்லித் தன்னுடைய விரல்நுனியாலே மோவாயைத்தூக்கி முத்தமிட்டதனாலே ரோமாஞ்சிதங்களாய் இன்னமும் அந்நிலைமாறாதே யிருப்பதாக வருளிச்செய்கிறார். அழகருடைய திவ்ய மங்கள விக்ரஹத்திலே ஸ்ரீக்ருஷ்ண தாதாத்ம்ய பாவனை முற்றி அருளிச்செய்ததிது. *கோவலனாய் வெண்ணெயுண்ட வாயன் அண்டர்கோனணியரங்கன்* என்று திருப்பாணாழ்வாரு மநுபவித்தாரன்றோ.

[107. ஹே ஸுந்தரைகதரஜந்மநி க்ருஷ்ணபாவே] ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்தில் ஏகக்ஷணத்தில் மாதாக்களிருவர், பிதாக்களிருவர், குலங்களுமிரண்டு என்னும் படியானது எதற்காக வென்று ஆராயுமிடத்து இரண்டுகுலங்களுக்கும் தகுதியாக மனைவியரிருவரைப் பரிக்ரஹிக்கைக்காகவேபோலுமென்று சமத்காரமாக வருளிச்செய்கிறாரிதில். தேவகீ யசோதைகளென்று தாயாரிருவர்; வஸுதேவ நந்தகோபர்களென்று தந்தையர் இருவர்; யதுகுலகோபாலகுலங்களென்று குலங்களிரண்டு; ஆக இவை இரண்டிரண்டாக *ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவிலொருத்தி மகனாய்* என்னும்படி ஸ்வல்பகாலந் தன்னிலே யானது என்ன உத்தேச்யத்தினாலென்னில்; [நீலா குலேந ஸத்ருசீ கில ருக்மிணீ ச] கோபால குலத்திற்குத் தகுதியாக நப்பின்னைப் பிராட்டியையும், க்ஷத்ரிய குலத்திற்குத் தகுதியாக ருக்மிணிப்பிராட்டியையும் பெறுவதே உத்தேச்யமென்கிறார். திருமழிசைப்பிரான் திருச்சந்த விருத்தத்திலே *ஆயனாகி யாயர் மங்கை வேயதோள் விரும்பினாய்* என்றருளிச்செய்ததையே உயிராகப் பிடித்து அருளிச் செய்தது இந்தச்லோகம். கண்ணபிரான் நந்தகோபன் குமரனாக வளரத் திருவுள்ளம்பற்றினபோதே ஸ்ரீதேவி பூதேவிகளோடொக்க திவ்யமஹிஷியான நீளாதேவிதானும் இடைக்குலத்திலே யசோதைப்பிராட்டியின் உடன்பிறந்தவனான கும்பனென்பவனுக்கு மகளாய்த் தோன்றி நப்பின்னைப்பிராட்டியென வழங்கப்பட்டு வந்தாள். அவளுடைய தந்தையானவர் ஒருவர்க்குமடங்காத அஸுராவேசம் பெற்ற ஏழு எருதுகளைக் கந்யாசுல்கமாகக் குறிப்பிட்டு இவற்றை வலியடக்குபவற்கே என்மகளை விவாஹஞ் செய்துகொடுப்பேனென்று உறுதிகொண்டிருக்கையில் கண்ணபிரான் சென்று அவற்றை வலியடக்கி அப்பிராட்டியை மணஞ்செய்துகொண்டு பின்னைமணாளனாயினன். இவ்வரலாறு ஸ்ரீவிஷ்ணுபுராண ஸ்ரீபாகவதாதிகளில் காணப்பெற்றதில்லை. யாதவாப்யுதயத்தில் நான்காவது ஸர்க்கத்தில் "நீசாகஜாநாமிவ சாக்வராணாம்" என்னும் ச்லோகத்தில் இக்கதை கூறப்பட்டுள்ளது; அவ்விடத்து வியாக்யானத்தில் அப்பயதீக்ஷிதர் இக்கதை ஹரிவம்சத்திலுள்ளதென்று வரலாற்றுடன் எடுத்துக்காட்டியுள்ளார். ஆழ்வார்களருளிச்செயல்களில் ருக்மிணி ப்ரஸ்தாவமுள்ளது அதிஸ்வல்பமேயாம். திருவாய்மொழியில் ஓரிடத்திலும் பெரியாழ்வார் திருமொழியில் இரண்டிடங்களிலும் நாச்சியார் திருமொழியில் ஓரிடத்திலுமேயுள்ளது. நப்பின்னைப்பிராட்டியின் ப்ரஸ்தாவமுள்ளவிடங்கள் அபரிமிதங்கள். 'குலவாயர் கொழுந்து' என்று அவளை நம்மாழ்வார் சிறப்பித்துக் கூறுவர். ஆயர்குலத்திலே யமைந்த திவ்ய மஹிஷியானதுபற்றியே.

[108. த்வம் ஹி ஸுந்தர! யதா ஸ்தநந்தய:] திருமாலிருஞ்சோலையழகரே! பண்டு கண்ணபிரானாகத் திருவவதரித்த தேவரீர் யசோதாஸ்தநந்தயராக மட்டும் இராமல் பூதநாஸ்தநந்தயராகவுமிருந்தது; பூதனையினுடைய நஞ்சு

தீற்றிய முலைப்பாலை அமுதாகவுண்டருளிற்று. அப்பேய்ச்சி யூட்டிய விஷந் தானே பிறர்வாயில் புகுந்தால் முடித்தல்லது விடாது; ஒருவராலும் ஜரிப்பித்துக் கொள்ளப் போகாது. அது உமக்கு ஜீரணமான வளவேயன்றிக்கே அவளுயிரைத்தானே முடித்து நின்றதே; இதுவென்கொல்! என்று அதிசயித்து அவர்தம்மையே நோக்கிக் கேள்வி கேட்கிறவிதனுல் சைசவத்திலும் பரத்துவம் குறையநில்லாத பெருமை பேசப்பட்டதாயிற்று.

[109. *ஆச்ரிதேஷு ஸௌலப்ய பவந் பவாந்*] கண்ணபிரானுடைய ஸௌலப்ய பரம காஷ்டையிலீடுபட்டு உருகிப் பேசுகிருர். அழகரே! தேவரீர் ஆச்ரித ஸௌலப்யத்தாலே கட்கிலியானவுருவத்தைக் கண்ணுக்கிலக்காம்படியாக்கி *துயரில்மலியும் மனிசர் பிறவியில் தோன்றிக் கண்காணவந்து* என்கிறபடியே மநுஷ்யஸஜாதீயராக அவதரித்தது பற்றிக் கேள்வியில்லை; *ஒளியா வெண்ணெயுண்டானென்று உரலோடாய்ச்சி யொண் கயிற்ருல் விளியாவார்க்க வாப்புண்டு விம்மியழுதான்* என்றும் *எழில் கொள்தாம்பு கொண்டடிப்பதற்கு எள்குநிலையும் வெண்தயிர் தோய்ந்த செவ்வாயும் அழுகையுமஞ்சி நோக்குமந்நோக்குமணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும்* என்றும் சொல்லுகிறபடியே கண்ணிநுண் சிறுத்தாம்பினுல் உரலோடு கட்டுண்டு ஏங்கியழுது கிடந்தது எதற்காக? இக்குணத்தை எந்த வகுப்பில் சேர்ப்பது? என்கிருர்.

[111. காலியஸ்ய பணநாம் சிரஸ் து மே.] திருவாய்ப்பாடியிலிருந்து ப்ருந்தாவனத்திற்கு நாடோறு மெழுந்தருளாநின்ற கண்ணபிரான் நம்பி மூத்தபிரானேடு கூடவே யெழுந்தருள்வது வழக்கம். ஒருநாள் அவனை யொழியப் புறப்பட்டுக் கன்றுகளை யோட்டிக்கொண்டு ஒருவரும் ஸஞ்சரியாத வழியே போகத்தொடங்க, மற்றுள்ள பிள்ளைகள் 'கண்ணு! அவ்வழி நோக்கவேண்டா; அவ்வழியிற்சொன்னுல் யமுநாநதியின் ஓர்மடுவில் காளியனென்னுங் கொடிய நாகம் தன் குடும்பத்தோடு வாஸஞ் செய்துகொண்டு விஷத்தீயைக் கக்கி யாவரையும் பிணமாக்கிவிடுவதால் நாங்கள் அஞ்சுகின்றோம்' என்ன, அக்காளிய நாகத்தைத் தண்டிக்கவேண்டுமென்று திருவுள்ளங்கொண்ட கண்ணன் அப்பிள்ளைகளுக்கு அபயங்கூறி உடனழைத்துக்கொண்டு அம்மடுவிற்குச் சென்று அங்கு அருகேயுள்ளதொரு கடம்பமரத்தின்மேலேறி அம்மடுவில் குதித்து அந்நாகத்தின் படங்களின்மேலேறி நின்று நர்த்தனஞ்செய்து வலியடக்கினதாக இதிஹாஸம். இதனை ஆழ்வார்கள் *பல்லவந்திகழ்பூங்கடம்பேறி அக்காளியன் பணவரங்கில், ஒல்லை வந்துறப் பாய்ந்து அருநடஞ்செய்த உம்பர்கோன்" என்பதுமுதலான பாசுரங்களினுல் அநுபவிக்கிருர்கள். இதனை யநுஸந்திக்கின்ற ஆழ்வான் 'காளியநாகத்தின் மத்தகமாகவோ கடம்பமரத்தின உச்சியாகவோ ஆகப்பெறவேணும்' என்று தம்முடைய திருமுடிவிரும்புவதாக அருளிச்செய்கிருர். அதன் காரணத்தை நான்காம்பாதத்தில் தாமேயருளிச்செய்கிருர்: *கோலமாமென் சென்னிக்கு உன் கமல மன்ன குரைகழலே* என்றும் *அடிச்சியோந்தலைமிசை நீயணியாய் ஆழியங்கண்ணுவுன் கோலப்பாதம்* என்றும் பிரார்த்தித்துப் பெறவேண்டியபேறு அவற்றுக்கு அநாயாஸமாகக் கிடைத்ததேயென்று வியந்து பேசினபடி.

[112. கூஷிதஸ்வமஹிமாபி ஸுந்தர!] கீழே அதிமாநுஷஸ்தவாநுபவம் எடுத்துக்காட்டியபோது "கோபாலபோதகதயா நிப்ருதம் தரித்ரீம்" என்று காட்டிய சுலோகத்தின் சாயையாகவே இந்த ச்லோகமுமிருந்தாலும் "ப்ருச்சந் ச ஸூஹ்ருத: சிமக்ருத:" என்கிற நாலாவது பாதம் இங்கு விசேஷம். இந்த ச்லோகத்

தில் மூன்று கேள்விகள் பகவானை நோக்கிக்கேட்டிருக்கிறார்; திருவாய்ப்பாடியில் நெடுநாளாக நடந்துவந்த இந்திரபூஜையைத் தடுத்தது ஏன்? என்பது முதற் கேள்வி. பராத்பரனான தான் வளருகிற ஊரிலே தேவதாந்தரத்திற்கு ஆராதனை யாவதென்? என்றிருந்தபடியாலே தடுத்ததாக இதற்கு விடை கூறிவிடலாம். அவ்விந்திரன் ஏழுநாள் கல்மழைபெய்வித்து ஆயர்களுக்கும் ஆநிரைகளுக்கும் பொறுக்கொணாத்தீங்கை விளைத்தபோது அவனைத் தலையரிந்து போகடவேண்டி யிருக்க அது செய்யாதே மலையைக் குடையாக வேந்தி ஏழுநாள் ஒருபடிப்பட நின்றதேன்? என்பது இரண்டாவது கேள்வி, 'இந்திரனுடைய உணவைக் கொண்டநாம் உயிரையுங் கொள்ளவேணுமோ? இந்த மலையே நமக்கு ரக்ஷக மென்று நாம் அடியிலே சொன்ன வார்த்தையை மெய்யாக்கிக்கொண்டிருந்தோ மாகில் அவன் கைசலித்தவாறே தானே ஓய்ந்துநிற்கிறான்' என்று ஆந்ருசம்ஸ் யம் கொண்டாடி நின்றதாக இதற்கு விடைகூறலாம். மலையெடுத்துநின்ற அதிமாநுஷ சேஷ்டிதங்கண்டு ஆச்சரியமுற்ற ஆயர்கள் "தேவோ வா தாநவோ வா த்வம் யக்ஷோ கந்தர்வ ஏவ வா?"—நீ தேவனா? தானவனா? யக்ஷனா? கந்தர் வனா? என்று கேட்க, "க்ஷணம் பூத்வா த்வஸௌ தூஷ்ணீம் கிஞ்சித் ப்ரணய ரோஷவாந்" என்கிறபடியே அப்படி அவர்கள் கேட்டதற்காகச் சீற்றங்கொண்ட தாகவுள்ளது; சீற்றங்கொள்ளும்படியாக அவர்கள் ஒன்றுங் கேட்கவில்லையே; உன்னுடைய பெருமையைத்தானே பேசினார்கள்; அப்படியிருக்க, சீற்றங் கொண்டது ஏன்? என்பது மூன்றாவது கேள்வி. பரத்வத்திலே வெறுப்புக் கொண்டு மநுஷ்யஸஜாதீயனாய், அதிலும் வலக்கை யிடக்கையறியாத இடை யர்களுள் கடைகெட்ட இடையனாய் ஆசையோடு நான் வந்து பிறந்திருக்க, என்னை தேவனாகச் சொன்னால் அது எனக்கு நிந்தையன்றோவென்று எம்பெரு மான் விடைகூறவேண்டும்.

[*115.* இங்கிதம் நிமிஷிதஞ் ச தாவகம்] கீழே அதிமாநுஷஸ்தவத்தில் "யா கம்ஸ முக்க்யந்ருபகீட நிபர்ஹணோத்தா ஸா நிர்ஜித த்ரிஜகதஸ் தவ நைவ கீர்த்தி:" என்னும் ச்லோகத்தினால் ஒரு விஷயமருளிச்செய்திருந்தார்; (அதாவது) மூவுலகையும் வென்ற ஸர்வசக்தனான ஸர்வேச்வரனுக்குக் கம்ஸன் முதலிய புழுக்களை நறுக்கினது ஒரு புகழல்ல என்றார். உண்மை இதுவாகில், மஹான் கள் கம்ஸவதம் முதலானவற்றையும் சொல்லி ஏத்துகின்றார்களே, இதுவென்? என்று ஒரு சங்கை தோன்றக்கூடியதுண்டு; அதற்குப் பரிஹாரமுணர்த்து கிறாரிந்த ச்லோகத்தில். என்ன பரிஹாரமென்றால், செய்கின்ற செயல் சிறிதா பெரிதா என்று பாரார் பக்தர்கள். செய்தவன் யாவன்? என்று அஃதொன் றையே பார்ப்பர்கள். எம்பெருமான் செய்தது கண்ணபிரான் செய்தது என்று தெரியவந்தால் சிறிது பெரிதென்கிற வாசியின்றிக்கே ஸகலசரிதங்களை யும் ஸமரீதியாகவே புகழ்ந்து பேசக் கடமைப்பட்டவர்கள் பக்தர்கள்—என்கிற பரமார்த்தம் இதில் வெளியிடப்பட்டது. நம்மாழ்வார் திருவாய்மொழியில் (5—10—2) *அது இது உது என்னலாவனவல்ல என்னை உன் செய்கை நைவிக்கும்* என்றருளிச் செய்த பாசுரத்தின் விவரணமாயிற்று இந்த ச்லோகம்.

[*116.* *வாராணஸீதஹந பௌண்ட்ரகபௌமபங்க] கீழ் ச்லோகத்தில் 'அல் பகமபி' என்றாரே; அல்பமன்றிக்கே அநல்பமென்று மதிக்கக்கூடிய சேஷ்டிதங் களும் பலவுண்டே; அங்ஙனேயுள்ள சிலவற்றை யெடுத்துரைத்து இவையெல் லாம் கர்ணாம்ருதமான சரித்திரங்களென்கிறாரிதில்,

வாராணஸீதஹந பௌண்ட்ரகபங்க—பௌண்ட்ரக பங்கம் முன்பும் காசீதஹனம் பின்பும் நடந்ததாகையாலே பௌண்ட்ரக பங்கத்தை முன்னே யநுஸந்திப்பது. பௌண்ட்ரகனென்பானோரரசன் வாஸுதேவ னென்று பேர்பெற்றிருந்தான். பல மூடர்கள் திரண்டு 'நீ தான் ஸாக்ஷாத் வாஸுதேவ பரமாத்மா' என்று அவனைப் புகழ்ந்து கொண்டிருந்தார்கள். அவனும் தன்னையே வாஸுதேவனாக மயங்கி மார்பு நெறித்துச் சங்கு சக்கரம் கிரீடம் முதலியவற்றைச் செய்வித்துத் தானணிந்து கொண்டு தூதனையழைத்து 'நீ க்ருஷ்ணனிடம் போய் என் பெயரைச் சொல்லி இன்னான் வாஸுதேவனாயிருக்க நீ அவனுடைய சங்கு சக்கரங்களைத் தரிக்கக்கூடாது; இன்று முதல் விட்டுவிடவேண்டியது; இல்லையாகில் யுத்தஞ் செய்ய வருக—என்று தெரிவிக்க வேண்டியதென்று சொல்லியனுப்ப, அங்ஙனமே அந்தத் தூதன் வந்து க்ருஷ்ணனிடம் அச்செய்தியைச் சொல்ல, கண்ணபிரான் சீறிச்சினந்து பெரிய திருவடியின் மீதேறிச் சென்று போர் செய்து பௌண்ட்ரகனைத் தனது திருவாழியினால் தலையறுத்துக் கொன்றொழித்தான். இச்செய்தியை அவனது தோழனான காசி மன்னன் கேள்விப்பட்டு க்ருஷ்ணனையும் மற்றும் யாதவர்களையும் த்வாரகையையும் அழித்திடுவதாகச் சங்கற்பித்து ஒரு பிசாசத்தை ஸ்ருஷ்டித்து ஏவலிட்டான்; அப்பிசாசம் த்வாரகைக்கு வந்து பாதிக்கத் தொடங்கிற்று; இச்செய்தியைச் செவியுற்ற கண்ணபிரான் அப்போது அக்ஷக்ரீடையில் வ்யாஸக்தனா யிருந்ததனால் தானெழுந்து ஒன்று செய்யாமலே திருவாழியாழ்வானை ஏவியிட, அவன் அப்பிசாசத்தைத் துரத்திக்கொண்டு காசியளவும்போய் அதையும் அத்துடன் சேர்ந்துவந்த கணங்களையும் அந்தக் காசிப்பட்டணத்தையும் நீறாக்கி மீண்டனனென்ற வரலாறு அறியத்தக்கது.

பௌமபங்க கல்பத்ருமாஹரண—பௌமனென்று நரகாஸுரனுக்குப் பெயர்; எம்பெருமான் வராஹாவதாரஞ் செய்து பூமியைக் கோட்டற் குத்தியெடுத்தபொழுது எம்பெருமானுடைய ஸ்பர்சத்தால் பூமி தேவிக்குக் குமாரனாய்ப் பிறந்தவனும் அஸமயத்தில் சேர்ந்து பெறப்பட்டதனால் அஸுரத் தன்மை பூண்டவனுமான நரகனென்பவன் ப்ராக்ஜோதிஷமென்னும் பட்டணத்திலிருந்து கொண்டு ஸகல ப்ராணிகளையும் நலிந்து தேவஸித்த கந்தர்வாதிகளுடைய கன்னிகைகளையும் பற்பலரை பலாத்காரமாய் அபஹரித்துக் கொண்டுபோய்த் தான் மணம்புணரத் தன்மாளிகையிற் சிறைவைத்து, வருணனது குடையையும் மந்தரகிரி சிகரமான ரத்ன பர்வதத்தையும் தேவமாதாவான அதிதி தேவியின் குண்டலங்களையும் கவர்ந்துபோனதுமன்றி இந்திரனுடைய ஐராவத யானையையும் அடித்துக்கொண்டு போக ஸமயம் பார்த்திருக்க, அஞ்சிவந்து பணிந்து முறையிட்ட இந்திரன் வேண்டுகோளால் கண்ணன் கருடனை வரவழைத்து ஸத்யபாமையுடனே தான் கருடன் மேலேறி அந்நகரேகிச் சக்ராயுதத்தைப் பிரயோகித்து அவனது மந்த்ரியான முரன் முதலிய பல அஸுரர்களையும் இறுதியில் அந்த நரகாஸுரனையும் அறுத்துத்தள்ளி யழித்து, அவன் சிறைப்படுத்தியிருந்த பதினாறாயிரத்தொரு நூறு கன்னிகைகளையும் ஆட்கொண்டு, நரகனால் முன்பு கவரப்பட்ட அதிதியின் குண்டலங்களை அவ்வதிதிதேவிக்குக் கொடுக்கும் பொருட்டு ஸத்யபாமையுடனே கருடன் தோள்மேலேறிக்கொண்டு தேவலோகத்துக்குச்செல்ல, அங்கு இந்திராணி ஸத்யபாமைக்கு ஸகல உபசாரங்களைச் செய்தும் தேவர்க்கே உரிய பாரிஜாத புஷ்பம் மானிடப் பெண்ணாகிய இவளுக்குத் தகாதென்று ஸமர்ப்பிக்கவில்லையாதலின் அதனைக்கண்டு பாமை விருப்புற்றவளாய் நாதனை நோக்கி இந்தப் பாரிஜாத தருவை த்வாரகைக்குக் கொண்டுபோக வேண்டுமென்ன, உடனே மரத்தை வேரோடு பெயர்த்துப்

6

பெரிய திருவடி தோளின்மேல் வைத்தருளி, அப்பொழுது இந்திராணி தூண்டி விட்டதனால் வந்து மறித்துப் போர் செய்த இந்திரனை ஸகல தேவஸைன்யங் களுடன் சங்கநாதத்தாலே பங்கப்படுத்திப் பின்பு பாரிஜாத தருவை த்வார கைக்குக் கொண்டுவந்து ஸத்யபாமையின் தோட்டத்தில் நாட்டியருளினன் என்ற வரலாறு அறிக.

சங்கரஜ்ரும்பணத்யா:—பாணஸமர யுத்தத்திலே ஜ்ரும்பகாஸ்த்ர ப்ரயோகம் பண்ணிச் சிவபெருமானைக் கொட்டாவி விட்டுக்கொண்டு கிடக்கும்படி செய்தது முதலான. அந்யச்ச பாரதபலக்ரதநாதய: தே க்ரீடா:—*மலைபுரை தோள் மன்னவரும் மாரதரும மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன் சிலை வளையத் திண்டேர்மேல் முன்னின்று செய்த லீலைகளுமெல்லாம்.

ச்ரவணாம்ருதா:—தேவரீர் திறத்திலே விஸ்மயப் படத் தக்கவை யல்லவாகி லும் ஒவ்வொரு சரிதையும் செவிக்கு அமுதமாயிருப்பவை யன்றோ. *செவிகளா லார நின் கீர்த்திக் கனியென்னுங் கவிகளே காலப்பண் தேனுறைப்பத் துற்றிப், புவியின்மேல் பொன்னெடுஞ் சக்கரத் துன்னையே அவிவின்றி யாதரிக்குமென தாவியே* என்ற திருவாய்மொழிப் பாசுரம் இங்கே அநுஸந்தேயம். ஆக இவ் வளவும் ஸ்ரீக்ருஷ்ணாவதாரா நுபவமாய்த் தலைக்கட்டிற்று. .... .... *

இனி, வரதராஜஸ்தவத்தில் க்ருஷ்ணாவதார சேஷ்டிதாநுபவபரங்களான ச்லோகங்களாகத் தனியே இல்லையாயினும் தேவப்பெருமாளுடைய அநுபவத் திலே கண்ணபிரானுடைய சேஷ்டிதங்களும் திருக்குணங்களும் ஸ்ம்ருதிவிஷய மாகி யருளிச்செய்தவை ஐந்தாறு ச்லோகங்களுண்டு. (39) *பரிமண்டிதாஸ மண்டலாபி:* (43) *ஆச்லேஷே வரத! புஜாஸ் தவேந்திராயா:* (46) *ரிங் காதோ வ்ரஜஸுதநாங்கணேஷு* (51) *யா தாமோதரஇதி* (54) *முஷ்ணங் க்ருஷ்ண:* (70) *பஜத்ஸு வாத்ஸல்யவசாத்* இதயாதிகள். அவற்றை நம் முடைய வியாக்கியானங்கொண்டு அநுபவித்து ரஸிப்பது. .... .... *

கூரத்தாழ்வானுடைய க்ருஷ்ணகுணாநுபவம் முற்றிற்று

## ஸ்ரீக்ருஷ்ணாவதாரமும் பட்டரும்

பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் ஸ்ரீரங்கநாதனை யநுபவிக்குமிடத்து தமக் குள்ள ஸ்ரீக்ருஷ்ணப்ராவண்யம் தோற்ற அநுபவித்திருக்கும் வகைகளை யெடுத் துக்காட்டுவோம். பூர்வசதகத்தில் ஸ்ரீரங்கநாதனைத் திருமுடிதொடங்கித் திருவடி யளவும் அநுபவித்து வருணித்துவருகையில் திருமார்பு வர்ணனத்தில் "வக்ஷஸ் ஸ்தல்யாம் துலஸிகமலாகௌஸ்துபைர் வைஜயந்தீ ஸர்வேசத்வம் கதயதிதராம் ரங்கதாம்நஸ் ததாஸ்தாம், கூர்மவ்யாக்ரீநகபரிமிலத்பஞ்சஹேதீ யசோதாநத்தா மௌக்த்யாபரணமதிகம் நஸ் ஸமாதிம் திநோதி" என்கிறார். பெரியபெருமா ளுடைய திருமார்பில் பரத்வ ஸௌலப்யங்களிரண்டையும் அநுபவிக்கிற அழகு ஆச்சரியமானது. திருமார்பு பிராட்டியினாலும் ஸ்ரீகௌஸ்துபமணியாலும் வன மாலையாலும் அலங்கரிக்கப்பட்டிருப்பதுபோலவே, பண்டு க்ருஷ்ணாவதாரத்தில் யசோதைப்பிராட்டி சாத்தின அச்சுத்தாலி ஆமைத்தாலி முதலிய க்ராம்யபூஷ ணங்களினாலும் அலங்கரிக்கப்பட்டிருக்கையாலே பரத்வஸௌலப்யங்களிரண் டும் பொலிகின்றனவென்று அருளிச்செய்கையில், பரத்வத்தைக்காட்டுமது கிடக்கட்டும் என்று அதில் உபேக்ஷையைக்காட்டி ஸௌலப்ய ப்ரகாசத்திலே

ஆதராதிசயம் தோற்ற அருளிச் செய்கிறர். திருத்துழாயலங்கல் திருமாமகள் குருமாமணிப்பூண் வனமாலை ஆகிய இவ்வாபரணங்கள் பெரியபெருமாளுடைய ஸர்வேச்வரத்வத்தை ப்ரகடனம் செய்கின்றனவாயினும், ஆமைநகம் புலிநகம் பஞ்சாயுதஹாரம் என்னுமித் திருவாபரணங்கள் யசோதைப்பிராட்டி சாத்தி னவை இன்னமும் திருமார்பிலே திகழநின்று ஸௌலப்யகாஷ்டையை விளங்கச் செய்கின்றனவாதலால் இவையே தம்முடைய தியானத்தில் தலைசிறந்து நிற்ப தாக அருளிச்செய்தாராயிற்று. கண்ணபிரான் இளம்பிராயத்தில் அணிந்து கொண்டிருந்த கோபாலஜாதீயபூஷணங்கள் பெரியபெருமாளுடைய திருமார் பிலே திகழ்வதாக அருளிச்செய்தது பாவநாப்ரகர்ஷமிருந்தபடி.

மேலே திருவடிகளை வருணிக்கையில் (124) "யந் ப்ருந்தாவநபண்டிதம்" என்று தொடங்கித் திருவடிக்கு விசேஷணங்களிடுகையில் மூன்று விசேஷணங் கள் க்ருஷ்ணவதார தாதாத்மியம் தோன்ற இட்டருளுகிறர். அவற்றைச்சிறிது விவரிப்போம். [யத்ப்ருந்தாவநபண்டிதம்] எம்பெருமானுடைய திருவடிகள் பல விடங்களிலு முலாவினுலும்

*இட்டமான பசுக்களை யினிதுமறித்து நீரூட்டிவிட்டுக்கொண்டு விளையாட விருந்தாவனத்தே கண்டோமே
*கணங்களோடு மின்மேகம் கலந்தாற்போல் வனமாலை மின்னுங்கநின்று விளையாடவிருந்தாவனத்தே கண்டோமே
*மேலால்பரந்த வெயில்காப்பான்வினதைசிறுவன் சிறகென்னும் மேலாப்பின்கீழ்வருவானை விருந்தாவனத்தே...
*போர்த்தமுந்தின் குப்பாயப்புகர்மால் யானைக்கன்றேபோல் வேர்த்துநின்று விளையாட விருந்தாவனத்தே...
*பீதகவாடை யுடைதாழப் பெருங்கார்மேகக் கன்றேபோல் வீதியாரவருவானை விருந்தாவனத்தே கண்டோமே
*உருவுகரிதாய் முகஞ்செய்தாயுதய பருப்பதத்தின்மேல்விரியுங் கதிரேபோல்வானை விருந்தாவனத்தேகண்டோமே
*அருத்தித்தாராகணங்களால் ஆரப்பெருகு வானம்போல் விருத்தம் பெரிதாய்வருவானை விருந்தாவனத்தே...
*கலிவண்டெங்குங் கலந்தாற்போல் கமழ்பூங்குழல்கள் தடந்தோள்மேல்மிளிரநின்று விளையாட விருந்தாவனத்தே...
*காட்டைநாடித் தேனுகனும்களிறும்புள்ளுமுடன்மடிய வேட்டையாடிவருவானை விருந்தாவனத்தேகண்டோமே.

என்னும்படி விருந்தாவனத்திலே யமுனைக்கரையிலே உலாவினபடியுண்டே அது எத்தனை யுகமானலும் பக்தர்களுக்கு மறக்கற்பாலதன்று இவருடைய திருத் தகப்பனர் அதிமாநுஷஸ்தவத்தில் "ப்ருந்தாவநம் மம தியஞ்ச ஸநாதயந்தி" என்றருளிச்செய்தார். ப்ருந்தாவனத்திலுள்ளதெல்லாம் தம்முடைய திருவுள் ளத்திலுமுறைந்துகிடப்பதாக வருளிச்செய்தார். பட்டர் ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிகளைப் பேசும்போது 'இவை ப்ருந்தாவனத்தில் உலாவினவை' என்றரு ளிச் செய்தவிது என்ன பாவநாப்ரகர்ஷமோ!

இதற்குமேல் [ததிரவை௱ யத்தாண்டவம் சிக்ஷிதம்] கீழே 'ப்ருந்தாவனத்தில் உலாவினது' என்னும் விவக்ஷையில் ப்ருந்தாவநபண்டிதம் என்றர். ஒருவரைப் பண்டிதரென்றல் 'இவர் சிக்ஷைபெற்றது எங்கே? இவரிடம் சிக்ஷைபெற்றவர் யார் யார்?' என்று கேள்விவருமே; அதற்கு ஸமாதானம் சொல்லுமாபோலே யிருக்கிறது இந்த வாக்கியம். ஆய்ச்சி தயிர்கடையும்போது அதனோசைக் கிணங்கக் கண்ணபிரான் கூத்தாடுவது வழக்கம். ஆகவே தயிர்கடையுமோசை களினுல் சிக்ஷை செய்விக்கப்பெற்ற தாண்டவத்தையுடையது ஸ்ரீரங்கநாதபாத மென்கை. இங்கே சிக்ஷிதம் என்கிற பதம் வெகுமருமமாக ப்ரயோகிக்கப்பட் டுளது. இதற்கு ப்ராபிதசிக்ஷம், என்கிற பொருளும் ப்ராப்தசிக்ஷம் என்கிற பொருளும் பொருந்தும். இவற்றல் தயிராவத்திற்கு ஆசார்யத்வமும் சிஷ்யத் வமும் பலிக்கும்.

இதற்குமேல் [யத் நூத்யப்ரஸங்கோத்ஸுகம்] எம்பெருமான் தனது திருவடியை நோக்கி 'பாதமே! நீ அமரருடைய சென்னியிலே வீற்றிருக்க விரும்புகிறாயா? அடியவர்கட்காகத் தூதுசெல்லப் புறப்படவிரும்புகிறாயா?' என்றால், தூது செல்வதையே பெரும்பேறாக நினைத்து அதுதன்னிலே சாலவும் காதல் கிளர்ந்திருக்குமாம். தூதுபோவதென்கிற வார்த்தை யுண்டாகுமளவிலேயே குணலக்கூட்தடிக்குமாம்; தூதுசெல்ல அவஸரங் கிடைப்பதெப்போதோ வென்று எதிர்பார்த்திருக்குமாம். இப்படிப்பட்டவையாம் ஸ்ரீரங்கநாத பாதாரவிந்தங்கள்.

## இனி உத்தரசதகத்தில் இரண்டு ச்லோகங்கள்

[71. ஆகண்டவாரிபரமந்தர மேகதேச்யம்] தேவகிப்பிராட்டிக்குப் பெரியதொரு தௌர்ப்பாக்யமுண்டு;—*தாலொலித்திடுந் திருவிணையில்லாத்தாயரில் கடையாயினதாயே* *அளவில் பிள்ளைமையின்பத்தை யிழந்தபாவியேன்* *திருவிலேனொன்றும் பெற்றிலேன் எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்றாளே* என்றிங்ஙனே பலபல சொல்லிப் புலம்பநின்ற தௌர்பாக்யவதியே யாயினும் நிகரற்றதொரு ஸௌபாக்யமுண்டு அவளுக்கு என்கிறார். கழுத்தே கட்டளையாக நீரைப்பருகின காளமேகம் போன்றும், பீதகவாடையுடுத்தும், செந்தாமரைக் கண்ணுடையதாகியும், அழகிய ஐம்படையணிந்தும் ஸாக்ஷாத்பரப்ரஹ்ம ஸ்வரூபியுமான ஸ்ரீக்ருஷ்ணகிசோரனைப் பிள்ளையாகப் பெறவேணுமென்று பாரித்து அங்ஙனமே பெற்ற தேவகியின் பாக்கியமே பாக்கியம்! இங்ஙனே பாரித்துப்பெற்ற மாதரசி வேறொருத்தியுண்டோ? என்று அவளைப் பாராட்டிப் பேசினாராயிற்று.

[72. *சைலோக்நீர் ச ஜலாம்பபூவ] கண்ணபிரான் குழலூதினபோது விளைந்த விசித்திரங்களைப் பெரியாழ்வார் *நாவலம்பெரிய தீவினில்வாழும் நங்கைமீர்களிதோ ரற்புதங்கேளீர்* என்று தொடங்கி ஒரு பதிகத்தினாலருளிச் செய்தார். பட்டர் இந்தவொரு ச்லோகத்தில் அதனை வெகு அற்புதமாக வருளிச்செய்து தலைக்கட்டுகிறார். இப்போது தம்மாலநுபவிக்கப்படுகிற பெரிய பெருமாளே பண்டு கண்ணனாயவதரித்துக் குழலூதினவராகையாலே பெரிய பெருமாளையே விளித்துக் கூறுகின்றார். தேவரீர் கோவலனாகிக் குழலூதி அனைவரையும் மயக்கினகாலத்து அது செவிப்படப்பெற்ற சேதநாசேதனங்களில் விகாரமடையாதிருந்த பொருள் ஒன்றுகூட இல்லையே! மலை கடினத்தன்மையை விட்டுப் பதஞ்செய்தது. நெருப்பு வெப்பத்தைவிட்டுத் தண்ணளிபெற்றது. யோகநிஷ்டர்களாயிருந்த முனிவர்கள் நெஞ்சில் ஒன்றும் தோன்றமாட்டாமல் ஜடத்தன்மை பெற்றார்கள். சைதந்ய சூன்யங்களான மரங்களும் அந்த மரங்களோடு வாசியற்ற இடையர்களும் மஹாஜ்ஞாநிகளாக ஆய்விட்டார்கள்: வேணு காநஸ்வாரஸ்ய ரஸிகர்களாயின ரென்றபடி. விஷதரங்களான நாகங்களும் அம்ருத ப்ராயங்களாயின. ஸஹஜசத்ருக்களான பசுக்களும் புலிகளும் தம்தம் வைரத்தை மறந்து ஒரு வரிசையாக நின்று வேணுகான ரஸாஸ்வாதநஸக்தங்களாயிருந்தன. இங்ஙனம் எவ்வளவு சொல்லலாம்? [அபரே து அந்யாம்பபூவு:] அப்போது யமுனையாற்றங்கரையி லிருந்த சராசரங்களில் விகாரமடையாததொன்றில்லை. கிம்பஹுநா? [த்வம் தேவ அந்யதமாம்பபூவித] அங்ஙனம் விகாரப்பட்ட பொருள்களில் எம்பெருமானும் ஒருவனென்கை. தன்னையும் விகாரப்படுத்தியது தன்குழலோசை. ஷாட்குண்யத்தி லொன்றான வீர்யம் என்னும் குணத்தைக் கீழே விவரிக்குமிடத்து (ச்லோ. 33ல்) *அவிக்ருதோ விக்ருணோஷி*

என்றார். கஸ்தூரியின் பரிமளம்போலத் தான் விகாரப்படாமலே ஸமஸ்த பதார்த்தங்களையும் விகாரப்படுத்துவதாக அருளிச்செய்தார். இங்கு, அவிகாரனான அவன் தானும் விகாரப்பட்டதாக வருளிச்செய்தார்; இதுவன்றோ வேணுகானத்தின் ஸ்வாரஸ்யம். .... .... .... .... ....*

பட்டருடைய க்ருஷ்ணகுணாநுபவம் முற்றிற்று.

## இனி வேதாந்ததேசிகனுடைய க்ருஷ்ணகுணாநுபவம்

தேசிகன் பணித்த பல ஸ்தோத்ரங்களிலும் ஊடேயூடே க்ருஷ்ணகுண சேஷ்டிதாநுபவங்கள் கலசியிருந்தாலும் கோபாலவிம்சதி யென்கிற இருபது ச்லோகங்கொண்ட ஸ்துதியும், இருபத்துநான்கு ஸர்க்கங்களமைந்த யாதவாப்யுதய மஹாகாவ்யமும் தனிச்சிறப்புப் பெற்றவை. கோபாலவிம்சதியில் ஒவ்வொரு ச்லோகமும் அநுபாவ்யமேயாயினும் ஈண்டு இரண்டு ச்லோகங்களை மட்டு மநுபவிப்போம்.

[5. *ஹர்த்தும் கும்பே விநிஹிதகர:] யசோதைப்பிராட்டி *ஏராரிடைநோவ எத்தனையோர் போதுமாய்ச் சீரார் தயிர்கடைந்து வெண்ணெய் திரண்டதனை வேறோர் கலத்திட்டு நாராருறியேற்றி நன்கமைய வைத்ததனை அவள் போந்தனையும் ஓராதவன்போல் பொய்யுறக்கமுறங்கி அவள்போனவாறே அறிவுற்று எழுந்து வெண்ணெயை யெடுத்துண்ணத் தாழியிலே கையிட்டான் கண்ணன்; அவ்வளவிலே யசோதை பதறிவந்து சீற்றத்தோடே தாம்பை யெடுக்கப்புக, இன்னது செய்வதென்று தோன்றாமல் பெயரவும்மாட்டாமல் வெண்ணெயை யெடுத்துண்ணவும் மாட்டாமல் கண்களை மூடிக்கொண்டு நின்றநிலையுண்டே அதுதான் *உறங்குவான்போல் யோகுசெய்த பெருமானுடைய உறக்கம்போலே விச்வரக்ஷணதக்ஷிணமா யிருந்தது. அதனையே நாம் கண்ணை மூடிக்கொண்டு தியானிக்கக்கடவோம்.

[20. வாஸோ ஹ்ருத்வா] திருவாய்ப்பாடியில் கண்ணபிரானைப்பிரிந்த ஆய்ச்சிகள் விரஹதாபத்திற்குப் பரிஹாரமாக நீரிலேபோய்ப் படிந்து முழுகி ஆச்வஸிக்கக்கருதிப் புதிதாகவொரு பொய்கையைத் தேடிப்போனார்கள். கண்ணன் இருளன்னமாமேனியனுகையாலே அவர்களது நிழலைப்பற்றிக்கொண்டுபோய் அவர்களுக்கு முன்னமே பொய்கைக்கரை போய்ச் சேர்ந்தான். இவர்கள் அவன் வந்தமையறியாதே தங்கள் சாதிவழக்கப்படி சேலைகளையும் மாலைகளையும் களைந்து கரையில் வைத்துவிட்டு நீரிலே குடைந்தாடினார்கள். அவ்வளவிலே கண்ணபிரான் அவற்றையெல்லாம் வாரியெடுத்துக்கொண்டு மிக விரைந்து குருந்தின்மேலேயேறித் தலையிலும் தோளிலும் மார்பிலுமிடுப்பிலும் அவற்றை யணிந்துகொண்டு இலைகளிலே மறைந்திருந்தான். ஆய்ச்சிகள் நீராடிக் கரையேறினவளவில் அவை காணாமே 'இஃது இருந்தபடி என்!' என்று துணுக்கென்று 'நம்முடன் கூடவந்தார் பிறராருமிலரே, இவற்றை ஆகாயங்கொண்டதோ! திசைகள் கொண்டனவோ? இக்குளங்கொண்டதோ?' என்று பல வகையாகச் சங்கித்து எங்கும் பருகுபருகென்று பார்த்துக்கொண்டு வாரா நிற்கக் கண்ணனைக் குருந்தமரத்திலே கண்டார்கள். கண்டபின்பு 'இவன் நம் அடிபிடித்து வந்தான்; நாமும் இவனை மடிபிடித்து வாங்கினோமாகவேணும்' என்றெண்ணி இவனை இரப்பார் ஏத்துவார் வாழ்த்துவார் தாழ்த்துவாராய், 'கண்ணா! இன்று நாங்கள் குளத்துக்கு வந்து பட்டபாடுபோதும்; இனி ஏழேழ் பிறவிக்கும் நாங்கள் இக்குளத்தின் முகத்திலும் விழியோம்; எங்கள் பட்டைப் பணித்தருளாய்' என்ன; அவன் 'இன்று நீங்கள் என்னை வஞ்சித்துவந்த

குற்றத்திற்காக ஓர் அஞ்ஜலி பண்ணுங்கோள்' என்ன; அவர்கள் லஜ்ஜை யினாலே ஒருகையால் அவயவத்தை மறைத்துக்கொண்டு மற்று ஒற்றைக் கையி னால் தொழ; ஏகஹஸ்தப்ரணாமம் சாஸ்த்ரநிஷித்தமாகையாலே இரண்டு கையாலும் தொழுதாகவேணுமென்று அவன் சொல்ல, ஆகில் தோழியும் நானும் தொழுதோம் என்று சொல்லி இருவரிருவராய்ச் சேர்ந்துதொழ, ஒவ்வொருத்தி யும் இருகைகளாலும் தொழுதாலன்றிச் சேலைகளைத் தாரேனென்று லீலாரஸம் கொண்டாடினபடியைச் சுருங்கப்பேசி யநுபவித்தாராயிற்று. .... .... *

## இனி யாதவாப்யுதயானுபவம்

தேசிகன் அருளிச்செய்த திவ்யக்ரந்தங்களுள் யாதவாப்யுதய காவ்யம் பக்தர்களுக்குப் பரமபோக்யமானது. கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் வளர்ந் தருளுங் காலத்தில் செய்த சிறுச் சேவகங்களை [பாலிச சேஷ்டிதங்களை] வெகு ரஸமாகப் பேசுகின்ற நான்காவது ஸர்க்கம் விசேஷித்து இனிமை தானே வடி வெடுத்ததென்னலாம். அந்த ஸர்க்கத்திலுள்ள 126 சுலோகங்களும் பக்தர் களால் நியமேந கண்டபாடம் செய்யத்தக்கவை. சில ச்லோகங்களை மட்டும் இங்கு எடுத்துக் காட்டுதும்.

(1) ஸ்தந்யேந க்ருஷ்ணஸ் ஸஹ பூதநாயா: ப்ராணாந் பபௌ லுப்தபுநர்பவாயா:,
யதத்புதம் பாவயதாம் ஜநாநாம் ஸ்தநந்தயத்வம் ந புநர் பபூவ.

நள்ளிரவிலே நஞ்சு தீற்றிய முலைப்பாலைக் கொடுத்து நலிய வந்த பூதனையின் ஸ்தந்யத்தோடுகூடவே அவளுயிரையும் பருகினான் கண்ணபிரான்; இந்த மாயச் செயலைச் சிந்தை செய்பவர்கள் மறுபடியும் ஒருதாய்வயிற்றிற் பிறந்து ஸ்தன்ய பானம் செய்யக்கடவர்களல்லர். கீதையில் "ஜந்ம கர்ம ச மே திவ்யமென்ற ச்லோகத்தில் "புநர் ஜந்ம நைதி" என்றதை மூதலித்தபடி.

(9) க்ரஹாதிதோஷாந் அபஹந்துகாமா: கோப்துஸ் ஸதாம் கோபதயஸ் ஸமேதா:,
ஸுவர்ணஸூத்ரக்ரதிதாபிராமாம் பஞ்சாயுதீமாபரணம் பபந்து:.

கண்ணபிரான் *காக்குமியல்வினன் கண்ணபெருமான்* என்கிறபடியே ஸர்வ ரக்ஷகனாய் அவர்களுக்கு நேரும் க்ரஹபீடை முதலானவற்றைப் போக்கவல்லவனா யிருக்கச் செய்தேயும் *காப்பாருமில்லை கடல்வண்ணாவுன்னைத் தனியேபோ யெங்குந்திரிதி* என்று வயிறுபிடிக்கும் பரிவர்களான கோவலர்கள் அவனைக் காக்கவேண்டி அழகிய வைம்படையை ஆரமாகச் சாத்தினார்கள்.

(30) ஆரண்யகாநாம் ப்ரபவ: பலாநாம்அரண்யஜாதாநி பலாத்யபிப்ஸந்,
விஸ்ரம்ஸிதாந்யாஞ்ஜலிநா கரேண வ்யாதாத்மஜாம் விச்வபதிஸ் ஸிஷேவே.

திருவாய்ப்பாடி வீதியில் ஒரு குறத்தி களாப்பழம் நாவல்பழம் பிரப்பம்பழம் முதலான காட்டுப்பழங்களைக் கொணர்ந்து விற்கையில் அவற்றை வாங்கி யுண்ண வேணுமென்று விருப்பங்கொண்ட கண்ணபிரான் நெல்லைக்கொடுத்து அந்தப் பழங்களை வாங்க வேணுமென விரும்பிக் கைநிறைய நெல்லைக்கொண்டு உள்ளிருந்து புறப்பட்டான். இளங்கையாகையாலே நெல்லுகள் கையில் தங்காமல் கீழேவிழுந்து கொண்டே வந்தன. பழக்காரியிடம் வரும்போது வெறுங்கையனாகவே காணப்பட்டான் கண்ணன்.

(31) ஸுஜாதரேகாத்மகசங்கசக்ரம் தாம்ரோதரம் தஸ்ய கராரவிந்தம்,
விலோகயந்த்யா: பலவிக்ரயிண்யா விக்ரேதுமாத்மாநமபூத் விமர்ச:

கண்ணன் கையில் கொண்டுவந்த நெல்லுகள் கீழே உதிர்ந்து போனபடியாலே வெறுங்கையை விரித்தவாறே அந்தக் கையில் சங்கும் சக்கரமும் ரேகையாக நன்கு காணலாயின. *நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய கைத்தலங்கள் வந்து காணீரே* என்னும்படியான திருக்கைத்தலங்களன்றோ. அவற்றைக் கண்ட அந்தக் குறத்தியானவள் ஐயோ! இந்த பரமபுருஷக் குழந்தைக்கு இந்தக் காட்டுப்பழங்களையா நாம் விற்பது!, ஆத்மாவையே விற்கவேண்டாவோ வென்று தோன்றிற்றும். [இவன் ஆயர் புத்திரனல்லன் அருந்தெய்வம் என்று தெரிந்து கொண்டாளென்கை.]

(32) ஆபூரயத் ஸ்வாதுபலார்ப்பணேந க்ரீடாசிசோர் ஹஸ்தபுடம் கிராதீ,
ரத்நைஸ் ததா கௌஸ்துபநிர்விசேஷைராபூரிதம் தத் பலபாண்டமாஸீத்.

பழங்களுக்கு விலையாகக்கூடிய நெல் கண்ணன் கையில் சிறிதுமில்லையாயினும், விளையாட்டுக்காகவே குழந்தையாயிருக்கின்ற இந்தப் பரமபுருஷனைப் பரிபூர்ண த்ருப்தி பெறுத்துவோமென நினைத்த குறத்தியானவள் கைநிரம்பப் பழங்களைக் கொட்டினாள். உடனே அந்தப் பழக்கூடை முழுவதும் கௌஸ்துப ஸமானமான ரத்னங்களினால் நிறைக்கப்பட்டதாயிற்று. .... .... .... *

(34) ஆநீதமக்ரே நிஜபந்தநார்த்தம் தாமாகிலம் ஸம்ஹிதமப்யபூர்ணம்
நிரீக்ஷ்ய நிர்விண்ணதியோ ஜநந்யா: ஸங்கோசசக்த்யா ஸ பபூவ பத்ய:.

கண்ணபிரான் களவுசெய்யத் தொடங்கும்போது வீட்டிலிருக்கும் கயிறுகளை யெல்லாம் துண்டுதுண்டாக்கி வைத்திட்டுப் பிறகு களவு செய்வது வழக்கம். யசோதை கையினால் தான் கட்டுண்ணப்பெறவேணுமென்கிற ஆசை ஒருபுற மிருக்கச்செய்தேயும் அதில் தனதொரு மாயச்செய்கையைக் காட்டவெண்ணி இங்ஙனே கயிறுகளைத் துண்டித்து வைப்பன். யசோதை இவனைக் களவிலே பிடித்துக்கட்ட நினைத்துக் கயிறுதேடுமளவிலே அவை துண்டுதுண்டாகக் கிடைக்க இவனையும்விடாதே அவற்றை முடிபோடத் தொடங்குவள்; ஒருவாறு கயிறுவடிவமாக்கி அதுகொண்டு இவனைக் கட்டப்புகுந்தவளவிலே நாலு சுற்றுக்குப் போதும்படியான அக்கயிறு ஒரு சுற்றுக்கும் போதாதபடி இவன் தன் திருமேனியைப் பெருக்கடிப்பன்; ஐயோ! இவனைக் கட்டமுடியவில்லையே யென்று யசோதை சோர்வுற்று 'இன்று போகட்டும், நாளை பார்த்துக்கொள் வோம்' என்று நினைத்தவளவிலே அதைத் தெரிந்துகொண்ட கண்ணபிரான் 'ஓராய்ச்சி கையில் கட்டுண்டோமென்கிற பெருமை பெறுவதற்காகவன்றோ நாம் ஆயர் குலத்தினில் வந்து தோன்றியது. இரந்துபெற்று உண்ணக்கூடிய வெண்ணெயையும் நாம் களவுவழியில் பெறப்பார்ப்பதும் இந்த பந்தந்திற் காகவேயன்றோ? இதை நாம் இழக்கலாமோ' என்று நினைத்து உடனே திருமேனியைச் சுருக்கிக்கொள்வனும். அப்போது எளிதாகக் கட்டப்படுவனும். ஆழ்வார்கள் பெரும்பாலும் கட்டுண்டானென்றே கூறிவைத்தார்கள்; மதுரகவிகளொருவரே மருமமறிந்து "கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன்" என்றார். அதனை இந்த சுலோகம் வியாக்கியானித்த தாயிற்று.

(64) விமோஹநே வல்லவகேலிநீநாம் ந ப்ரஹ்மசர்யம் பிபிதே ததீயம்,
ஸம்பத்ஸ்யதே பாலகஜீவநம் தத் ஸத்யேந யேநைவ ஸதாம் ஸமக்ஷம்.

கண்ணபிரானுடைய சேஷ்டிதங்களில் ஜாரக்ருத்யங்களும் பல காண்கின்றன; *தொத்தார் பூங்குழல் கன்னி யொருத்தியைச் சோலைத்தடங்கொண்டு புக்கு, முத்தார் கொங்கை புணர்ந்து இராநாழிகை மூவேழு சென்றபின் வந்தாய்*

என்ற பெரியாழ்வார் திருமொழிப்பாசுரம் போன்ற பல பாசுரங்களை நாம் அநுஸந்தித்து வருகின்றோம். *மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்குக் கச்சொடு பட்டைக்கிழித்துக் காம்பு துகிலவை கீறி நிச்சலும் தீமைகள் செய்கையாகிற இந்த ஜாரக்ருத்யம் பகவானுக்குத் தகுமா? இதனால் அவனுடைய ப்ரஹ்மசரியத்திற்குக் குறைபாடு நேராதா? என்று சங்கிப்பாருடைய சங்கையைத் தீர்க்கவே இந்த ச்லோகம் அவதரித்தது. *கருமலர்க் கூந்தலொருத்திதன்னைக் கடைக்கணித்தாங்கே யொருத்தி தன்பால் மருவி மனம் வைத்து மற்றொருத்திக் குரைத்து ஒரு பேதைக்குப் பொய் குறித்துப் புரிகுழல் மங்கை யொருத்தி தன்னைப் புணர்தி அவளுக்கும் மெய்யனல்லை.* [பெருமாள் திருமொழி 6—3] என்னும்படியான சேஷ்டிதங்கள் எத்தனை செய்தவளவிலும் கண்ணபிரானுடைய ப்ரஹமசரியம் சிறிதும் குறைபாடுற்றதில்லை. ஏனெனில்; பாரதப்போரில் அர்ஜுநன் மகனான அபிமந்யுவின் மனைவியாகிய உத்தரையென்பவளுடைய கருவை நோக்கி அச்வத்தாமாவினால் பிரயோகிக்கப்பட்ட அபாண்டவாஸ்த்ரத்தினால் அக்கருவிலிருந்த சிசு [பரீக்ஷித்] நீறுயொழிய, அச்சிசுவை மீண்டும் உயிர்பெறுத்த வேணுமென்று ஸுபத்ரையினால் பிரார்த்திக்கப்பட்ட கண்ணபிரான் தனது செந்தாமரைமலர் போன்ற திருவடியினால் அச்சிசுவை அடிதொடங்கி முடியீறாக ஸ்பர்சித்தருள, உத்தரக்ஷணத்திலேயே அச்சிசு உயிர்பெற்றமை ப்ரஸித்தம். அப்படி கண்ணபிரான் திருவடியினால் ஸ்பர்சிக்கும்போது *யதி மே ப்ரஹ்மசர்யம் ஸ்யாத் ஸத்யஞ் ச மயி திஷ்டதி, அவ்யாஹதம் மமைச்வர்யம் தேந ஜீவது பாலக:—*[நான் உண்மையான ப்ரஹ்மசாரியாக — அஸ்கலிதவீர்யனாக இருப்பேனாகில், ஸத்யவாக்த்வமுமென்னிடத்திலிருக்குமாகில் இந்த சிசு உயிர்பெற்று எழுந்திருக்கட்டும்] என்று சபதஞ்செய்தருளினதாகப் புராணங்கள் கூறுகின்றன. இதையே தேசிகன் இந்த ச்லோகத்தில் எடுத்துக்காட்டியருள்கின்றார். .... .... *

---

## பிள்ளைப்பெருமாளையங்காரனுபவித்த க்ருஷ்ணலீலைகள்

அஷ்டப்பிரபந்தம் பாடின பிள்ளைப்பெருமாளையங்கார் தமது பிரபந்தங்களில் ஆழ்வார்களைப்போலவே ஸ்ரீக்ருஷ்ணவதார சேஷ்டிதங்களை அற்புதமாக வநுபவித்துள்ளார். திருவரங்கத்துமாலையென்னும் பிரபந்தமொன்றில் இவர் அனுபவித்துள்ள க்ருஷ்ணலீலைகளில் ஏகதேசம் ஈண்டெடுத்து அநுபவிக்கவும் அநுபவிப்பிக்கவும் காதலிக்கிறோம். அப்பிரபந்தத்தில் நாற்பத்தொன்பதாவது செய்யுள் முதல் எழுபத்துமூன்றாஞ் செய்யுளளவும் இருபத்தைந்து செய்யுட்களினால் க்ருஷ்ணவதார சேஷ்டிதங்களின் அனுபவத்தை வகைவகையாகச் செய்து போந்திருக்கின்றார். அத்தனையும் பூர்த்தியாக இங்கநுபவிக்க அவகாசமின்மையால் சில செய்யுட்களின் சுவைகளை மட்டுமே சுவைத்துக் களிப்போம்.

ஐயங்கார் இவ்வநுபவத்தைத் தலைக்கட்டுஞ் செய்யுளில் அபூர்வமான புராண வரலாறொன்று தெரிவிக்கின்றார்; அசுரர்கள் தன்மீது அபரிமிதர்களாக மலிந்ததனாலுண்டான பாரத்தைப் பொறுக்கமாட்டாத பூமிதேவி மிகத் துன்பமுற்று நான்முகக்கடவுள் முதலான தேவர்களை முன்னிட்டுக்கொண்டு ஸ்ரீமந்நாராயணனைத் துதித்து வேண்டிக்கொள்ள, எம்பெருமான் தனது திருமேனியினின்று வெண்மையுங் கருமையுமான மயிர்கள்போல் காணப்பட்ட தேஜஸ்ஸுக்களை யெடுத்து 'இந்த எனது தேஜஸ்ஸுகள் பூமியில் தேவகியின் கருவில் தோன்றிப் பூமிக்குப் பாரத்தினாலுண்டாகின்ற துன்பத்தை நீக்கும்' என்று நியமித்துவிட, அந்த தேஜஸ்ஸுக்களே ஸ்ரீராமக்ருஷ்ணர்களாய்த் திருவவதாரஞ்-

செய்து மிகவுங் கொடிய அசுரரையும் அரசரையுமெல்லாம் ஸம்ஹரித்துப் பூமி பாரத்தை நீக்கியதாக அவ்வரலாறு உள்ளது. இதை யுணர்த்தும் செய்யுள்—

பொருங்கேதனப்படை மன்னரை மாய்த்துப் புவிமடந்தை
பெருங்கேத நீக்கி நடந்தது மீளப் பிறங்குபுள்ளின்
வருங்கேசவன் சக்ரமாயோ னரங்கன் வரவிடுத்த
கருங்கேசமொன்று தன்னிச்சையிலே செய்த காரியமே. (73)

.... .... .... ....

திருவாய்ப்பாடியில் கண்ணன் ஆயர்மனை தொறுஞ்சென்று வெண்ணெய்பால் முதலியவற்றைக் களவாடி யுண்பனே; ஒருநாள் ஒருத்தி வீட்டில் அங்ஙனம் ஏகாந்தமான வொரு அறையில் அவன் களவு செய்து கொண்டிருக்கக் கண்டவோர் ஆய்ச்சி அவனைப்பிடித்து உரலோடு பிணைத்துவிட்டு, அச்செய்தியை யசோதையிடஞ் சொல்லி முறையிட வேணுமென்று ஓடிப்போக, அப்போது யசோதை தன் குழந்தையான கண்ணனைத் தான் தன்னிடுப்பிலே கொண்டிருப்பதைக் கண்டு இவ்வாய்ச்சி வாய்திறக்க மாட்டாதே வெட்கப்பட்டு வாளா நின்றொழிந்தாளென்று சிலர் கதை கூறுவதுண்டு; ஐயங்கார் கூறியுள்ள கதை அதனிலும் விசித்திரமாகவுள்ளது. அவ்வாய்ச்சி தன்வீட்டில் கண்ணனை உரலோடு கட்டிவிட்டு, யசோதை பக்கலில் முறையிட வரும்போது தன்குழந்தையை இடுப்பிலே வைத்துக்கொண்டு வந்தாளாம்; 'யசோதாய்! உன் மகனுடைய செய்தியை என் வீட்டிலே வந்துபார்' என்று சொல்ல வாய்திறக்கும்போதே கண்ணபிரான் மாயையினால் அவ்வாய்ச்சியின் இடுப்பிலுள்ள பிள்ளை தானாகவும், அவளது வீட்டில் கட்டுண்டு கிடக்கும் பிள்ளை அவளுடைய மகனாகவும் ஆய்விட்டதாம். இதற்குச் செய்யுள் வருமாறு—

"உன்னைக் களவி லுரலோடு கட்டிவைத் துன்னுடைய
அன்னைக்கொருத்தி யறிவித்தபோது, அலையாழிமங்கை
தன்னைப் புணர்ந்தருள் தாரரங்கா! அவள் தன் மருங்கில்
பின்னைக் கொடுசென்ற பிள்ளை மற்றுரென்று பேசுகவே. (50)

இச்சந்தர்ப்பத்தில் நினைவுக்கு வருவதொரு கர்ணாம்ருத ச்லோகமுண்டு;

"அந்தர் க்ருஹே க்ருஷ்ணமவேக்ஷ்ய சோரம் பத்த்வா கவாடம் ஜநநீம் கதைகா,
உலூகலே தாமநி பத்தமேநம் தத்ராபி த்ருஷ்ட்வா ஸ்திமிதா பபூவ."—என்பதாம்.

ஓரிடைச்சி தன்னில்லத்தில் தன்மகளை மட்டும் தனியே விட்டிட்டு, "பாலைக் கறந்தடுப்பேறவைத்துப் பல்வளையாளென் மகளிருப்ப, மேலையகத்தே நெருப்பு வேண்டிச் சென்று இறைப்பொழுதங்கே பேசிநின்றேன்" [பெரியாழ்வார் 2—9—5] என்ற க்ரமத்திலே தான் மேலண்டை வீட்டுக்குச் சென்றிருந்தாள். அப்போது கண்ணன் மகளிருக்கும் வீட்டினுள்ளே புகுந்து மகள் அங்யபரையாயிருப்பது கண்டு வெண்ணெய் பால் முதலியன வுள்ளவிடத்தே சென்று களவு செய்துகொண்டிருந்தான்; அதைத் தெரிந்துகொண்ட மகள் மெதுவாகவந்து அவ்வறையின் கதவைப் பூட்டிச் சாவியை யெடுத்துக்கொண்டு தாயிருக்குமிடத்தேற ஓடிச்சென்று 'அம்மா! அந்த் கள்ளக் கண்ணன் இதுவரையில் நமக்கு அகப்படாமலே யிருந்தானே; இன்று அகப்பட்டுக்கொண்டான்; இதோபார், கதவைப்பூட்டிச் சாவியைக் கொணர்ந்துவிட்டேன்; அவன் உள்ளே கிடந்து வருந்துகின்றான்; வந்து பாரம்மா!' என்று சொல்லுகையில், அங்கே ஒருபுறத்தில் கண்ணனை உரலிலே கட்டிப்போட்டிருப்பது கண்டு 'இதென்ன விசித்திரம்! இதென்ன மாயம்!' என்றுசொல்லி வியந்து நின்றனளாம்.

கண்ணபிரான் பால் முதலியவற்றைக் களவு செய்ததற்காக ஓரிடைச்சி பெரியதொரு மத்தைக்கொண்டு அடித்தனளாக, அப்போது அவனது திருவயிற்றினுள் அசையாது வைத்து அவனால் பாதுகாக்கப்பட்டிருந்த ஸகல லோகங்களும் அவற்றிலுள்ள சராசரங்கள் யாவும் அடிபட்டனவென்கிறார் ஐயங்கார்; இதைக்கூறுஞ் செய்யுள் வருமாறு;

"......காளியன்மேல் நடிக்கும் பெரியபெருமாளரங்கர் நறைகமழ்பால்
குடிக்குங் களவுக்கு மாறுகொண்டே யொருகோபிபற்றி
அடிக்கும்பொழுதிற் பதினாலுலகு மடிபட்டவே. (51)
... ... ... ...

*தாயெடுத்த சிறுகோலுக்கு உளைந்தோடி* என்று திருமங்கையாழ்வாரருளிச்செய்தபடியே ஒருநாள் கண்ணன் தான் செய்த குற்றத்திற்காகத் தன்னையடிக்கக் கோலெடுத்துவந்த யசோதைக்கு அகப்படாதபடி ஓடிச்செல்ல அவள் 'இன்று நான் உன்னைவிடுவதில்லை' யென்று சொல்லிக்கொண்டு மெல்லத்தொடர்ந்து வாராநிற்க, கனவேகமாகச் சென்ற கண்ணன் வழியிடையே பெரியதொரு வெறுந்தயிர்த்தாழியை வைத்துக்கொண்டு உறங்காநின்ற ததிபாண்டனென்னு மிடையனைக் கைதட்டி யெழுப்பி 'கிழவா! என் தாய் என்னையடிக்க வருகிறாள்; நான் இன்னமும் எவ்வளவு தூரமோடுவேன்; மிகவும் களைத்துப்போனேன்; இந்தத் தாழியினுள்ளே யென்னைப் புகுரவிட்டு மறைத்திடு; என்தாய் இங்கே வந்து கேட்டாலும் என்னைக் கண்டிலேனென்று எனக்காக வொருபொய் சொல்லிவிடு' என்று இரக்க, மாயாமாநுஷவிக்ரஹனான இவனே பராத்பரனென்றறிந்துகொண்ட அக்கிழவன் இன்று எப்படியாவது இவனிடத்து முத்திபெறுவதென்று துணிந்து அவனது கோரிக்கைப்படியே அவனைச் சட்டியினுள் மறைத்துவைத்திருந்து, அவ்விடம் வந்து வினவிய யசோதைக்கும் பொய் சொல்லி அவளையனுப்பிவிட்டு, கண்ணனைத் தாழியினின்றும் புறப்படவிடாதே 'எனக்கும் இந்தத் தாழிக்கும், எனக்கு உறவினரான இருபது மனைக்காரர்களுக்கும் பரமபதம் கொடாவிடில் உன்னை யசோதை கையில் காட்டிக்கொடுப்பே' னென்று கூறி அங்ஙனமே முத்தியருளப் பெற்றானென்று ப்ரஹ்மவைவர்த்த புராணத்திற் கூறியதொரு கதையுண்டு; இதனைச் சுருக்கமாகவொரு செய்யுளினால் அநுபவிக்கிறார்; அது வருமாறு—

"சிந்திக்க நெஞ்சில்லை நாவில்லை நாமங்கள்செப்ப நின்னை
வந்திக்க மெய்யில்லை வந்திருபோது மொய்ம் மாமலர்ப்பூம்
பந்தித் தடம்புடைசூழரங்கா ததிபாண்டனுன்னைச்
சந்தித்தநான் முத்தி பெற்றதென்னோ தயிர்த்தாழியுமே.

பிள்ளைப்பெருமாளையங்காரனுபவம் முற்றிற்று.

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்
எழுதிய
ஸ்ரீ ஜயந்தியநுபவம்
முற்றுப்பெற்றது

### (கைகேயி மந்தரையைக் கடிந்து கூறுதல்)

183. வெயின்முறைக் குலக்கதிரவன் முதலிய மேலோர், உயிர்முதற்பொருள் திறம்பினும் முறைதிறம்பாதோர்
மயின்முறைக் குலத்துரிமையை மனுமுதன்மரபைச், செயிருறப் புலைச்சிந்தையா லென்சொனாய் தீயோய்.64

| | | | |
|---|---|---|---|
| தீயோய் | கொடியவளான் மந்தரையே! | மயில் முறை குலத்து உரிமையை | (நான் பிறந்த) கேகய குலத்து உரிமையையும் |
| வெயில் முறை கதிரவன் முதலிய மேலோர் | கிரணங்களின் வரிசையையுடைய சிறந்த சூரியன் முதலாகிய பெரியோர் | மனு முதல் மரபை | வைவஸ்வத மனுவினது சிறந்த வம்சத்தையும் |
| உயிர் முதல் பொருள் திறம்பினும் | உயிர் முதலிய சிறந்த பொருள்கள் தவறினும் | செயிர் உற | குற்ற முற்றதாம்படி |
| முறை திறம்பாதோர் | நீதிமுறை தவறாதவர்கள்; | புலை சிந்தையால் | அற்பமான மனத்தினால் |
| | | என் சொனாய் | என்ன சொன்னாய் பாவீ! |

***—நான் பிறந்த இடத்திலும்' புகுந்த இடத்திலும் நிகழும் நிகழ்ச்சிக்கு மாறுபாடாக மூத்தவனிருக்க இளையவனுக்குப் பட்டங்கட்டுமாறு உன் இழிந்த மனப்போக்கின்படி துராலோசனை கூறுகின்றாயே படுபாவீ! என்று கைகேயி கூனியைக் கடிந்து கூறினள். கேகய நாடானது மயில் நாடென்று தமிழில் வழங்கப்பெறும். கேகீ என்பது மயிலுக்கு வடமொழிப்பெயர். .. 64

### (இதுவுமது)

184. எனக்குநல்லையு மல்லைநீ யென்மகன் பரதன், தனக்கு நல்லையுமல்லையத் தருமமே நோக்கின்
உனக்குநல்லையுமல்லை வந்தூழ்வினை தூண்ட, மனக்கு நல்லன சொல்லினை மதியிலா மனத்தோய்! 65

| | | | |
|---|---|---|---|
| மதி இலா மனத்தோய் | அறிவுகெட்ட மனத்தையுடைய கூனியே | உனக்கு நல்லையும் அல்லை | உனக்கும் தீமையை விளைத்துக் கொள்ளப் பார்க்கிறாயத்தனை; |
| நீ எனக்கு நல்லையும் அல்லை | நீ எனக்கு நன்மையைச் செய்பவளுமன்று; | ஊழ் வினை வந்து தூண்ட | உன்னுடைய கொடிய பாவம் வந்து உன்னைத் தூண்டியதனால் |
| என் மகன் பரதன் தனக்கும் நல்லையும் அல்லை | என் மகனுக்கும் நன்மையை நாடுபவளல்லை; | மனக்கு நல்லன சொல்லினை | உன்மனத்துக்கு நன்றாயிருப்பவைகளைச் சொன்னாய் அத்தனை. |
| அத் தருமம் நோக்கின் | அந்த ராஜதருமத்தை நோக்குமிடத்து | | |

### (இதுவுமது)

பிறந்திறந்துபோய்ப் பெறுவது மிழப்பதும் புகழேல், திறந்திறம்பினும் நியாயமே திறம்பினும் நெறியின்
திறந்திறம்பினும் செய்தவந்திறம்பினும் செயிர்தீர், மறந்திறம்பினும் வரன்முறை திறம்புதல் வழக்கோ? 66

| | | | |
|---|---|---|---|
| பிறந்து இறந்து போய் | மனிதர் பிறந்தாயினும் இறந்தாயினும் | நெறியின் திறம் திறம்பினும் | நல்வழியின் தன்மை மாறுபட்டாலும் |
| பெறுவதும் | அடையும் பயனும் | செய் தவம் திறம்பினும் | செய்கின்ற தவம் மாறுபட்டாலும் |
| இழப்பதும் | இழந்துபோகும்பயனும் | செயிர்தீர் மறம் திறம்பினும் | குற்றமற்ற வீரம் மாறுபட்டாலும் |
| புகழ் ஏல் | கீர்த்தியே யென்றால் | வரன் முறை திறம்புதல் | தன் குலமரியாதை தவறுதல் |
| திறம் திறம்பினும் | குணம்மாறுபட்டாலும் | வழக்கோ | நியாய மாகுமோ? (ஆகாது) |
| நியாயம் திறம்பினும் | நீதி மாறுபட்டாலும் | | |

### (கைகேயி கூனியை முடிவாகச் சினந்து உதறுதல்)

185 போதி யென்னெதிர்நின்று நின்புன்பொறி நாவைச், சேதியாதிது பொறுத்தனன் புறஞ்சில ரறியின்
நீதியல்லவும் நெறிமுறையல்லவும் நினைந்தாயாதி, ஆதலினறிவிலி யடங்குதியென்றாள். 67

கூனி! நீ என்னெதிரிலிருப்பதைத் தவிர்ந்து அப்பாலொழிந்து போ; அற்பப்பேச்சுக்களுக்கிடமாகிய உன்புல்லிய நாக்கை அறுத்தெறியாமல் இக் குற்றத்தை மன்னித்தேன். என்னையன்றி வேறுசிலர் இதனையறிந்தால் நியாயமல்லாதவையும் நல்லொழுக்கமல்லாதவையுமாகியவற்றை நினைந்து சொன்ன குற்றத்துக்கு உள்ளாவாய்; ஆகையால், அறிவுகெட்டவளே! வாயை மூடிக்கிட.

### (கூனி அஞ்சாது மீண்டும் துர்ப்போதனை செய்யத் தொடங்குதல்)

186. அஞ்சி மந்தரை யகன்றில ளம்மொழிகேட்டு, நஞ்சுதீர்க்கினும் தீர்கிலாதது நலிந்தென்னத்
தஞ்சமேயுனக் குறுபொருளுணர்ந்துகை தவிரேன், வஞ்சிபோலியென் றடிமிசை வீழ்ந்துரை வழங்கும். 68

விஷத்தை நீக்கினாலும் அது நீங்காது வருத்துவதுபோல, கூனியானவள் கைகேயி அதட்டிச் சொன்ன வார்த்தையைக் கேட்டும் அஞ்சி விலகாதவளாய்; 'வஞ்சிக்கொடி போன்றவளே! எனக்குத் தஞ்சமாயிருப்பவளே! நீ சீறினாலும் உனக்குப் பொருத்தமான நற்காரியங்களை யறிவிக்கை தவிரமாட்டேன்' என்று சொல்லிக் கைகேயியின் காலில்விழுந்து மீண்டும்பல சொல்லலுற்றாள். .... 68

### (கூனியின் போதனையால் கைகேயி மனம் மாறுபடுதல்)

187. தீயமந்தரை யிவ்வுரைசெப்பலுந் தேவி, தூயசிந்தையுந் திரிந்தது சூழ்ச்சியினிமையோர்
மாயையுமவர் பெற்றுள வரமுமுண்மையினால், ஆயவந்தண ரியற்றிய வருந்தவத்தாலும்.

கொடிய கூனி சொன்னவார்த்தைகளைக் கேட்டவுடனே கைகேயியின் பரிசுத்தமான மனமும் கூனியின் கொடிய ஆலோசனைப்படி மாறுபாடடைந்துவிட்டது; (இதற்குச் சில காரணங்களுண்டு;) தேவர்களின் மாயம்; அத்தேவர் பெற்ற சிறந்தவரம் தவறாமை; வேதியர் செய்த அரியபெரிய தவங்கள். இவை காரணமாகவே கைகேயியின் மனம் மாறுபட்டதென்க. 77

### (கைகேயி அலங்கோலமாகக் கிடந்ததன் வருணனை)

188. நவ்வி வீழ்ந்தென நாடக மயில் துயின்றென்னக், கவ்வைகூர்தரச் சனகியாங் கடிகமழ்கமலத்து
அவ்வைநீங்குமென் றயோத்திவந் தடைந்தவம் மடந்தை, தவ்வையாமெனக் கிடந்தனள் கேகயன்
தனயை. 88

| | | | |
|---|---|---|---|
| கேகயன் தனயை | கைகேயியானவள் | சனகி ஆம் கடி கமழ் கமலத்து அவ்வை | ஸீதாதேவியாகிற ஸ்ரீமஹாலக்ஷ்மி |
| கவ்வை கூர்தர | துக்கம் முற்றியதனால் | நீங்கும் என்று | காட்டிற்கு நீங்குவாளென்று |
| நவ்வி வீழ்ந்தென்ன | மான்பேடை விழுந்தாற்போலவும் | அயோத்தி வந்து அடைந்த அ மடந்தை தவ்வை என | அயோத்திமாநகரில் வந்து சேர்ந்திருந்த அந்த லக்ஷ்மியின் மூத்தவள் போலவும் |
| நாடகம் மயில் துயின்று என்ன | குலாவிக் கூத்தாடுகின்ற மயில் (கூத்தொழிந்து) ஒடுங்கிக் கிடந்தாற்போலவும் | கிடந்தனள் | விழுந்து கிடந்தாள், |

* * * கைகேயி மனத்திரிபு தோன்ற அலங்கோலமாய்க் கிடந்தது - மான் விழுந்ததனையும், மயில் கொஞ்சிக் கூத்தாடுதலொழிந்து ஒடுங்கிக் கிடந்ததனையும், லக்ஷ்மியாகிய ஸீதை நகர்விட்டு நீங்குவது குறித்து மூதேவி குடிபுகுந்ததையும் போலுமென வருணித்தாராயிற்று. .... .... ... ௪௮

மந்தரை சூழ்ச்சிப்படலம் முற்றிற்று.

---

## 3. கைகேசி சூழ்வினைப்படலம்

மந்தரையினால் மனம் கலைக்கப்பட்ட கைகேயி ஸ்ரீராமபட்டாபிஷேகத்திற்கு இடையூறு செய்ய ஆலோசித்த தீய செயலைத் தெரிவிக்கும் பகுதி இது. ஸ்ரீ ராமபட்டாபிஷேகத்தை நிச்சயித்த அன்றிரவில் சக்ரவர்த்தி அச்செய்தியைக் கைகேயிக்கு உணர்த்துமாறு அவளது மாளிகைக்குச் சென்றான். அப்போது கைகேயி அலங்கோல நிலையுடன் கிடப்பதைக்கண்டான். இவட்கு என்ன நேர்ந்ததோவென்று நெஞ்சு சோர்ந்து தன்கைகளால் அவளையெடுக்கத்தொடங்கினான். கைகேயி அவனது கையைத்தள்ளி மண்ணில் வீழ்ந்து பெருமூச்சு விட்டாள். வார்த்தையடைவில் அவளது கடுநெஞ்சைத் தெரிந்துகொண்ட மன்னவன் எவ்வளவு நல்வார்த்தைகள் சொல்லியும் அவள் கேளாததனால் பெருந் துயரத்தோடு 'வரம் தந்தேன் தந்தேன்; என்மகன் காடு செல்ல நான் வானகம் செல்லுகின்றேன்; நீ உன்மகனோடு வசைக்கடலில் அழுந்துக' என்று கூறி மூர்ச்சித்தான். இவ்வரலாற்றினை இராமபிரான் தெரிந்துகொண்டு கைகேயியிடம் வந்துசேர்ந்து, 'பரதன் உலகத்தையாள நீ பதினான்கு வருடம் தவக்கோலத்துடன் காட்டில் காலங்கழித்து வரவேண்டும்' என்ற கைகேயி கட்டளைக்கு உடன்பட்டு மிக்கமனமகிழ்ச்சியைக் காட்டி 'என்தம்பிபெற்ற செல்வம் நான் பெற்றதேயன்றோ; இதோ கானம் போகின்றேன், விடைபெற்றுக் கொள்கின்றேன்' என்றானென்பது இப்படலத்தின் கதை. .... *

(தசரதன் கைகேயியை வேண்டிக் கூறுவது)

**189.** கொள்ளான் நின்சேய் இவ்வரசன்னான் கொண்டாலும், நள்ளாதிந்த நானிலம் ஞாலந்தனிலென்றும்
உள்ளாரெல்லா மோதவுவக்கும் புகழ்கொள்ளாய், எள்ளாநிற்கும் வன்பழிகொண்டென் பயனென்றான். 26

| | | | |
|---|---|---|---|
| | (அடி கைகேயி !,) | என்றும் | எக்காலத்திலும் |
| நின் சேய் | உன் மகனான பரதன் | ஞாலந் தனில் உள்ளார் எல்லாம் | பூமியிலுள்ளவர்களெல்லாரும் |
| இவ் அரசு கொள்ளான் | இவ்வரசாட்சியை நீ வாங்கிக்கொடுத்தாலும் தான் பெற்றுக்கொள்ள மாட்டான்; | ஓத உவக்கும் புகழ் | சொல்ல விரும்புகின்ற கீர்த்தியை |
| அன்னான் கொண்டாலும் | உனது நிர்ப்பந்தத்தினால் ஒருகால் அவன் பெற்றுக்கொண்டாலும் | கொள்ளாய் | பெறமாட்டாய்: |
| இந்த நானிலம் நள்ளாது | இப்பூமியிலுள்ளவர் அதனை மெச்சமாட்டார்கள்; (ஆதலால் நீ) | எள்ளாநிற்கும் வன் பழி கொண்டு | உலகத்தார் நிந்திக்கும்படியான கொடிய பழியையடைவதனால் |
| | | பயன் என் என்றான் | யாது பயனுண்டாமென்றான். |

(இதுவுமது)

190. வானோர்கொள்ளார் மண்ணவருய்யார் இனிமற்றேன், ஏனோர்செய்கை யாரொடுநீயிவ் வரசாள்வாய்?
யானேசொல்லக் கொள்ளவிசைந்தான் முறையாலே, தானே நல்கும் உன்மகனுக்குந் தரையென்றான். 27

| | |
|---|---|
| வானோர் கொள்ளார் | (கைகேயி! உனது கொடிய கருத்தைத்) தேவர்கள் அங்கீகரிக்கமாட்டார்கள்; |
| மண்ணவர் உய்யார் | (உன் கருத்து நிறைவேறினால்) நிலவுலகத்தாரும் உயிர் வாழ்ந்திருக்கமாட்டார்கள்; |
| இனி மற்று ஏனோர் செய்கை என் | இனி, மற்றைப் பாதாளலோகத்திலுள்ளாரது செய்கையைப் பற்றிச் சொல்லவேண்டியது என்னவிருக்கிறது? (ஒன்றுமில்லை.) (இராமன் காட்டுக்கு அனுப்பப்படப் பரதன் அரசு புரிவதைக் குறித்து மூவுலகத்தவரும் உடன்படாதிருக்கும்போது) |
| நீ யாரோடு இவ் அரசு ஆள்வாய் | நீ எவருடன் இந்த ராஜ்யத்தைக் காக்கப்போகிறாய்? |
| யான் சொல்லவே கொள்ள இசைந்தான் | நானாகவே யழைத்து 'மகுடாபிஷேகம் செய்து கொள்' என்றதனாலேயே இவ்வரசாட்சியைப் பெற்றுக்கொள்ளச் சம்மதித்தவனான இராமன் |
| உன் மகனுக்கும் முறையாலே தானே தரை நல்கும் | உனது மகனான பரதனுக்கும் கிரமமாகத் தானே பூமியைக் கொடுப்பான் |
| என்றான் | என்றுகூறினான் மன்னவன். |

* * *—பரதன் அரசாள வேணுமென்பது உன் விருப்பமானால் இராமனைக் காட்டிற்குத் துரத்த வேணுமென்பதில்லை; உன் விருப்பத்தையறிந்த மாத்திரத்தில் இராமன்தானே பரதனுக்கு ராஜ்யத்தைத் தந்தருள்வன்; ஆகவே இராமன் வனவாசம் செல்ல வேணுமென்கிற கோரிக்கையை விட்டிடு என்றானயிற்று. 27

(இதுவுமது)

191. கண்ணேவேண்டு மென்னினு மீயக்கடவேனென், உண்ணேராவி வேண்டினு மின்றே யுனதன்றோ
பெண்ணே! வண்மைக்கேகயன்மானே! பெறுவாயேல், மண்ணேகொள்நீ மற்றையதொன்றும்
மறவென்றான். 28

| | |
|---|---|
| பெண்ணே வண்மை கேகயன் மானே! | அடி கைகேயி!, |
| கண்ணே வேண்டும் என்னினும் | என்னுடைய கண்களையே பிடுங்கிக் கொடுக்குமாறு நீ வேண்டினாலும் |
| ஈயக் கடவேன் | சிறிதும் பின்வாங்காமல் பிடுங்கிக் கொடுப்பேன்; |
| என் உள் நேர் ஆவி வேண்டினும் | எனது உள்ளே பொருந்திய உயிரையே நீ வேண்டினாலுங்கூட |
| அது இன்றே உனது அன்றோ | அது நான் கொடுக்கவேண்டாதபடி இப்போதே அசி உன்னதினமன்றோ? |
| பெறுவாய்ஏல் | வரத்தைப் பெற்றுக் கொள்ள விரும்புவாயாயின் |
| மண்ணே கொள் நீ | உன் மகன் அரசாள ராஜ்யத்தை மட்டும் வரமாகப் பெற்றுக்கொள்; |
| மற்றையது ஒன்றும் மற | இராமனைக் காட்டுக்குப் போகவிடவேணுமென்கிற வரத்தை மறந்திடு; |
| என்றான் | என்று தயரதன் கூறி முடித்தான். |

* * *—'மண்ணே கொள்நீ' என்றதற்கு—பிடிவாதமாக நீ கேட்பதன் பயன் உன்தலையில் நீயே மண்ணைப்போட்டுக் கொள்ளுதலேயாகுமென்பது உட்கருத்து. .... .... .... .... .... 28

## (கைகேயி இரங்காது மன்னவனை யிழித்துக் கூறுதல்)

192. இன்னேயின்னே பன்னியிரந்தானிகல்வேந்தன், தன்னேரில்லாத் தீயவளுள்ளந் தடுமாறாள்
முன்னே தந்தாய் இவ்வரம்நல்காய் முனிவாயேல் என்னேமன்னா யாருளர்வாய்மைக் கினியென்றாள். 30

| | | | |
|---|---|---|---|
| இகல் வேந்தன் இன்னே பன்னி இரந்தான் | ஜயாபிலனான சக்கரவர்த்தி இவ்வாறாக விரிவுறச் சொல்லி வேண்டினான்; | நல்காய் | (இப்பொழுது செய்கையில்) கொடாமல் |
| தன் நேர் இல்லா தீயவள் | கொடுமையில் தனக்கு ஒப்பற்றவளான கைகேயி | முனிவாய் ஏல் | வெறுப்பாயானால் |
| உள்ளம் தடுமாறாள் | மனம் மாறுபடாதவளாகி | மன்னா என்னே | சக்கரவர்த்தியே யாது உளது; |
| இ வரம் முன்னே தந்தாய் | 'இந்த வரங்களை முன்னே வாக்தானம் செய்தாய்; | இனி வாய்மைக்கு யார் உளர் என்றாள் | இனி ஸத்தியத்திற்கு (உலகில்) எவரிருக்கின்றார். நீ தோன்றி ஸத்தியம் முடிந்து விட்டதென்று உலகிற்பரவுமென்றாள். |

## (தசரதன் கைகேயிக்கு வரத்தைத் தந்தேனெனல்)

193. வீந்தாளேயிவ் வெய்யவளென்னா மிடல்வேந்தன், ஈந்தேனீந்தே னிவ்வரம், என்சேய் வனமாள
மாய்ந்தேன் நான்போய் வானுலகாள்வேன், வசைவெள்ளம் நீந்தாய் நீந்தாய் நின்மகனோடும்
நெடிதென்றான். 44

| | | | |
|---|---|---|---|
| இ வெய்யவள் | 'கொடியவளான இக் கைகேசி | நான் மாய்ந்தே போய் | நான் இறந்துபோய் |
| வீந்தாள் ஏ என்னா | (கேட்டவரத்தைக் கொடாவிட்டால்) இறந்தவளே யாவள்' என்றெண்ணி | வான் உலகு ஆள்வேன் | தேவ லோகத்தை ஆள்வேன்; |
| மிடல் வேந்தன் | வலிமை தங்கிய மன்னவன் | நெடிது | நீண்ட காலமளவும் |
| இ வரம் ஈந்தேன் ஈந்தேன். | 'நீ கேட்ட வரத்தைக் கொடுத்தேன் கொடுத்தேன்; | நின் மகனோடும் | உனது மகனான பரதனோடுங்கூட |
| என் சேய் வனம் ஆள | என்மகனான இராமன் காட்டையாள | வசை வெள்ளம் | பழியாகிய கடலை |
| | | நீந்தாய் நீந்தாய் | கடக்கமாட்டாமல் அதனுள் அழுந்துவாயாக' |
| | | என்றான் | என்றுசொன்னான். |

## (இராமன் வந்துநிற்க, அரசனது கட்டளையாகக் கைகேயி தெரிவித்தல்)

194. ஆழிசூ ழுலகமெல்லாம் பரதனேயாள நீபோய்த், தாழிருஞ் சடைகள்தாங்கித் தாங்கருந் தவமேற்கொண்டு
பூழி வெங்கான நண்ணிப் புண்ணிய புனல்களாடி, யேழிரண் டாண்டின் வாவென் றேவின
னரசனென்றாள். 107

| | | | |
|---|---|---|---|
| | (இராமா!) | பூழி வெம் கானம் நண்ணி | புழுதியையுடைய வெவ்விய காட்டைச் சேர்ந்து |
| ஆழி சூழ் உலகம் எல்லாம் | கடல் சூழ்ந்த இவ்வுலகத்தை யெல்லாம் | புண்ணிய புனல்கள் ஆடி | புண்ணிய தீர்த்தங்களிற் குடைந்தாடி |
| பரதனே ஆள நீ போய் | பரதனே ஆளும்படியாக நீ நகரிநின்றும் சென்று | ஏழ் இரண்டு ஆண்டின் வா என்று | பதினான்கு வருடங்கழித்து பின்பு திரும்பி வருக வென்று |
| தாழ் இரு சடைகள் தாங்கி | தொங்குகின்ற பெரிய ஜடைகளைத் தரித்துக் கொண்டு | அரசன் ஏவினான் என்றாள் | மன்னவன் கட்டளையிட்டாளென்று கூறினள் (கைகேயி). |
| தாங்க அரு தவம் மேல் கொண்டு | அருமையான தவவேடத்தை மேற்கொண்டு | | |

## (இராமன் அதுகேட்டு மகிழ்ந்தமை கூறல்)

195. இப்பொழு தெம்மனோரா லியம்புதற்கெளிதோ யாருஞ், செப்பருங் குணத்திராமன் திருமுகச்செவ்வி நோக்கின்
ஒப்பதே முன்பு பின்பு வாசகமுணரக்கேட்ட, அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா. 108

| | | | |
|---|---|---|---|
| யாரும் செப்ப அருகுணத்து இராமன் | யாரும் வருணிக்க முடியாத திருக்குணங்களை யுடைய ஸ்ரீராமபிரானது | (திருமுகச் செவ்வி) | இராமனது திருமுகத்தினழகானது |
| திரு முகம் செவ்வி | (நீ காடு செல்ல வேணுமென்று சொன்னபோது உண்டான) திருமுகமண்டலத்தினழகை | அப்பொழுது அலர்ந்த செந்தாமரையினை ஒப்பது | அப்போதலர்ந்த செந்தாமரை மலரை யொத்திருந்தது; |
| நோக்கின் | ஆராயுமிடத்து | | |
| இப்பொழுது எம்மனோரால் இயம்புதற்கு எளிதோ | அது இப்போது என்போன்றவர்களால் சொல்லக் கூடியதோ? | வாசகம் உணர கேட்ட பின்பு | வனவாச விஷயமான கைகேயி வார்த்தையை அறியக்கேட்டபின்போ வென்றால் |
| | (ஆனாலும் ஒருவார்த்தை சொல்லலாம்; அதாவது) | அப்... செந்தாமரையினை வென்றது | அத்தாமரை மலரை வென்றிட்டது; |
| முன்பு | நீ காட்டுக்குப் போகுக வென்று சொல்லுவதற்கு முன்னே | அம்மா | இதனை என்ன வென்று உரைப்பது! |

* * *—தன்னருகில் வந்து சேர்ந்த இராமனை நோக்கிக் கைகேயி 'நீ
. வனவாஸம் செய்யக்கடவை' என்று கட்டளையிட்ட காலத்து இராமனுக்கு
வருத்தமுண்டாகியிருக்கக் கூடுமென்று சிலர் எண்ணக்கூடுமன்றே; உண்மை
யில் சிறிதும் வருத்தமுண்டாகாததோடு பரமஸந்தோஷமே உண்டாயிற்றென்
பதை வான்மீகிமுனிவர் "வநவாஸோ மஹோதய:" என்று இளையபெருமானை நோக்
கிச்சொன்ன சொல்லால் தெரிவித்தார்; அதிற்காட்டிலும் மிக மேம்பாடாகத்
தெரிவிப்பது இச்செய்யுள். வநவாஸ ப்ரஸ்தாவம் வந்த காலத்தில் இராம
பிரானுடைய திருமுகமண்டலம் இருந்த விதத்தை அக்காலத்தில் நேரில் கண்ட
வர்கள் எடுத்துரைக்க வேணுமேயல்லது, எத்தனையோ ஆயிரக்கணக்கான
ஆண்டுகட்கு அப்பால் இன்று பிறந்துள்ள நானா அதைச் சொல்லுவது! என்று
கையொழிந்து ஏடுகளைக்கட்டி உள்ளே வைத்திட்டுச் சயனித்தாராம் கம்பர்;
இராமபிரான் கனவிலே தோன்றி முன்பிருந்த முகஸந்நிவேசத்தையும் பின்
பிருந்த முகஸந்நிவேசத்தையும் காட்டிக் கொடுக்க, உடனே துயிலெழுந்து
செய்யுளைப் பூர்த்தி செய்தாரென்று ஓர் ஐதிஹ்யம் சொல்லப்படுவதுண்டு.
"சந்த்ரகாந்தாநநம் ராமம்" (அயோத். 3—28) என்கிற ஸ்ரீராமாயண ச்லோகத்
திற்கு "சந்த்ரவத் காந்தம் ஆநநம் யஸ்ய" என்றொரு விக்ரஹமும், "சந்த்ராத்
காந்தம் ஆநநம் யஸ்ய" என்று மற்றொரு விக்ரஹமும் சொல்லுவதுண்டு;
சந்திரன் போலழகிய முகமுடையவன்' என்பது முந்தின விக்ரஹவாக்யத்தின்
பொருள்; சந்திரனிற் காட்டிலும் மிகவழகிய முகமுடையவன் என்பது பிந்தின
விக்ரஹவாக்யத்தின் பொருள். வநவாஸப்ரஸ்தாவமில்லாத காலத்தில் முந்தின
பொருள் அவகாசம் பெற்றிருந்தது; வனவாஸக்கட்டளை விளைந்தவுடனே
பிந்தின பொருள் அவகாசம் பெற்றது என்று கொள்க. .... .... 108

(இராமபிரான் கைகேயிக்குக் கூறிய விடை)

196. மன்னவன் பணியன்றாகில் நும்பணி மறுப்பனோவென்
பின்னவன் பெற்ற செல்வ மடியனேன் பெற்றதன்றோ?
என்னிதி னுறுதியப்பால் இப்பணி தலைமேற்கொண்டேன்
மின்னொளிர் கானமின்றே போகின்றேன் விடையுங்கொண்டேன். 110

(அம்மா கைகேயி!)

| | |
|---|---|
| மன்னவன் பணி அன்று ஆகில் | (சக்ரவர்த்தியின் கட்டளையாக நீர் தெரிவித்த இது) உண்மையில் சக்ரவர்த்தியின் கட்டளையன்று; எனினும் |
| நும் பணி மறுப்பனோ | நான்கட்டளையிடுகிறேனென்று நீர் சொன்னால் அதன்படி நடக்கப் பின்வாங்குவேனோ? |
| என் பின்னவன் பெற்ற செல்வம் | என் தம்பியான பரதனுக்கு ஐச்வரியம் ஏற்பட்டால் |
| அடியனேன் பெற்றது அன்றோ | (அது) நான்பெற்றதே யாகுமன்றோ? (எங்களுக்குள் வேற்றுமையில்லையே.) |
| அப்பால் இதனின் உறுதி என் | பின்பு இதனிலும் மேலான நன்மை யாது? |
| இ பணி தலை மேல் கொண்டேன் | இக்கட்டளையை ஆதரவோடு ஏற்றுக் கொண்டேன்; |
| மின் ஒளிர் கானம் | மின்னல்போல் வெயில் விளங்குகின்ற காட்டிற்கு |
| இன்றே போகின்றேன் | இப்போதே புறப்பட்டுச் செல்கின்றேன்; |
| விடையும் கொண்டேன் | விடையும் பெற்றுக் கொண்டேன். |

* * *—“என் பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றதன்றோ” என்ற இரண்டாமடிக்கு இருவகையான கருத்துண்டு; பரதனுண்டாலென்ன? நானுண்டாலென்ன? இரண்டும் துல்யமேயென்பது ஒரு கருத்து; பரதனுக்கு நீ அரசாட்சிச் செல்வம் வாங்கிக் கொடுத்தாலும் அவன் அதைக் கைக்கொள்ளாமல் என்னைப்போலவே சடைபுனைந்து தாபதனாயிருக்கப்போகிறானத்தனை காண் —என்பது மற்றொரு கருத்து; அடியனேன் பெற்ற செல்வமன்றோ பின்னவன் பெற்ற செல்வம் (ஆம்) என்று அந்வயிப்பது. ... .... .... 110

கைகேசி சூழ்வினைப்படலம் முற்றிற்று.

---

# 4. நகர் நீங்கு படலம்

(வசிட்டமுனிவன் கைகேயியைக் கடிந்து கூறுதல்)

197. கண்ணோடாதே கணவன் உயிரோடிடர்காணாதே, புண்ணூடோடுங்கனலோ விடமோ வென்னப் புகல்வாய்
பெண்ணோ தீயோ மாயாப் பேயோ கொடியாய் நீயிம், மண்ணோ டுன்னோடென்னும் வசையோ
வலிதேயென்றான்.

| | |
|---|---|
| கண் ஓடாதே | கண்ணோட்டமின்றிக்கே [நிர்தாக்ஷிண்யமாக] |
| கணவன் உயிர் ஓடு இடர் காணாது | சக்கரவர்த்தியின் உயிர் உடலை விட்டுச் செல்லுந் துன்பத்தையும் நினையாமல், |
| புண் ஊடு ஓடும் கனலோ என்ன | விரணத்தினுட் புகும் நெருப்போ! என்னும்படியாகவும் |
| விடமோ என்ன புகல்வாய் | விஷமே வடிவெடுத்ததோ! என்னும்படியாகவும் பேசுகின்றவளே! |

| | | | |
|---|---|---|---|
| நீ | மானிடப்பெண்போல் காணப்படுகிறாய் நீ | மன்னோடு உன்னோடு என் ஆம் | (இனி சக்ரவர்த்திக்கு) இம்மண்ணுலகத்தோடும் உன்னோடும் என்ன உறவுள்ளது? |
| பெண்ணோ | உண்மையில் மானிடப் பெண்ணோ ? | வசையோ வலிதே | உனக்கு வந்த பழிச்சொல்லோ வலிதே ; |
| தீ ஓ | (அன்றி) நெருப்போ ! | என்றான் | என்று வசிட்ட முனிவன் கூறினான். |
| மாயா பேய் ஓ | (அன்றேல்) விடாப்பிடியுள்ள பிசாசோ? | | |
| கொடியாய் | அடி சண்டீ ! | | |

(கைகேயியைக் குறித்து வசிட்டனைச் சாக்ஷியாகக் கொண்டு மன்னவன் கூறுதல்)

198. இன்னே பலவும் பகர்வான் இரங்காதாளை நோக்கிச், சொன்னேனின்றே யிவளென் தாரமல்லள் துறந்தேன்
மன்னேயாவான் வருமப் பரதன்றனையும் மகனென், றுன்னேன் முனிவா ! அவனும் ஆகானுரிமைக்
கென்றான். 50

| | | | |
|---|---|---|---|
| இன்னே பலவும் பகர்வான் | கீழே சில செய்யுட்களில் தெரிவித்தவாறு பல பேசின தயரதன் | துறந்தேன் | இவளை வெறுத்துத் தள்ளினேன் ; |
| இரங்காதாளை நோக்கி | எவ்வளவு இதமுரைத்தும் மனமிரங்காத கைகேயியை யுத்தேசித்து, | மன்னே ஆவான் வரும் | அரசனாக வேணுமென்கிற எண்ணத்தோடு வரப்போகிற |
| முனிவா | வஸிஷ்ட மஹர்ஷியே ! | அ பரதன் தனையும் | அந்தப் பரதனையும் |
| இன்றே சொன்னேன் | இப்பொழுதே சொல்லி விடுகிறேன் ; | மகன் என்று உன்னேன் | என் புதல்வனென்று கொள்ளமாட்டேன் ; |
| இவள் என் தாரம் அல்லள் | இப்படுபாவி என்மனைவி யல்லள் ; | அவன் உரிமைக்கும் ஆகான் என்றான் | அந்தப் பரதன் எனக்கு உத்தரக்கிரியை செய்தற்கும் உரியனாகானென்றான். |

(கானகஞ் செல்கின்ற மகனைக் குறித்துத் தயரதன் புலம்பல்)

199. அள்ளற் பள்ளப்புனல்சூழகன்மா நிலமும் அரசும்
கொள்ளக் குறையாநிதியின் குவையும் முதலாமெவையும்
கள்ளக் கைகேசிக்கே யுதவிப்புகழ் கைக்கொண்ட
வள்ளல்தனமென்னுயிரை மாய்க்கும் மாய்க்குமென்றான். 62

| | | | |
|---|---|---|---|
| அள்ளல் பள்ளம் புனல் சூழ் | கடலால் சூழப்பட்ட | கள்ளம் கைகேசிக்கே | கபட நெஞ்சுடைய கைகேயிக்கே |
| அகல் மா நிலமும் | மிக விசாலமான பூமியையும் | உதவி | போக்யமாக விட்டிட்டு |
| அரசும் | ராஜ்ய பாரத்தையும் | புகழ் கைக் கொண்ட | சாசுவதமான கீர்த்தியைப் பெற்ற |
| கொள்ள குறையா நிதியின் குவையும் | எவ்வளவெடுத்துச் செலவு செய்தாலும் குறையமாட்டாத நிதித்திரள்களையும் | வள்ளல் தனம் | (இராமா! உனது) ஔதார்ய குணம் |
| முதல் ஆம் எவையும் | இவை முதலான மற்று மெல்லாவற்றையும் | என் உயிரை மாய்க்கும் மாய்க்கும் என்றான் | எனது பிராணனை முடிக்கும் முடிக்கும் என்று கூறினன் தயரதன். |

(சுமித்திரை லக்ஷ்மணனுக்குச் சில சொல்லி விடை தருதல்)

200. ஆகாதன்று னக்கவ்வன மிவ்வயோத்தி, மாகாதலிராம னம்மன்னவன் வையமீந்தும்
போகாவுயிர்த்தாயர் நம்பூங்குழற் சீதையென்றே, ஏகாய் இனியிவ்வயின் நிற்றலு மேதமென்றாள். 151

| | | | |
|---|---|---|---|
| | (இலக்குமனே !,) | | |
| அவனம் உனக்கு ஆகாதது அன்று | அந்தக்காடு நீ செல்லுவதற்குத் தகாததன்று; (இராமனுடன் காட்டுக்குச் செல்லுதலே உனக்குத் தகுதி;) | வையம் ஈந்தும் உயிர் போகா தாயர் | பரதனுக்கு நாடென்றும் உனக்குக் காடென்றும் சொன்ன பின்புங்கூட உயிரையிழவாமலிருக்கிற தாயாவள்; |
| அவனம் இ அயோத்தி | அந்தக்காடு இவ்வயோத்திமா நகரம்; | என்றே | என்று நினைத்துக் கொண்டே |
| மா காதல் இராமன் | உன்னிடத்து மிக்க அன்பு கொண்டவனான இராமபிரானே | ஏகாய் | இராமனோடு செல்வாயாக. |
| நம் மன்னவன் | தசரதசக்ரவர்த்தியாவன்; | இனி இவயின் நிற்றலும் ஏதம் | இனி இவ்விடத்தில் நிற்பதும் உனக்கு அவத்யமாகும் |
| நம் பூ குழல் சீதை | பூவையணிந்த கூந்தலையுடைய நமது ஸீதையே | என்றாள் | என்று சுமித்திரை கூறினள். |

* * *—வான்மீகிராமாயணத்தில் "ராமம் தசரதம் வித்தி மாம் வித்தி ஜநகாத்மஜாம், அயோத்யாமடவீம் வித்தி கச்ச தாத! யதாஸுகம்" என்று ஸுமித்திரையின் வாக்காகவுள்ள ச்லோகத்தைத் தழுவி இயற்றப்பட்டது இச்செய்யுள். லக்ஷ்மணா! நீ இராமனுடன் காட்டுக்குச் செல்லும்போது அயோத்தியையும் பெற்றோரையும் பிரிந்து செல்ல நேர்கின்றதேயென்று வருந்த வேண்டா; இராமனுடன் வாழ்தலால் அவ்வனமே அயோத்திபோலும்; இராமனும் சீதையுமே பெற்றோராவர் என்றிங்ஙனே கருதி மகிழ்ந்து செல்வாயாக; இனி இங்குத் தாமதித்தலும் தகாது—என்றாள் சுமித்திரை. 'அவ்வனம் இவ்வயோத்தி' என்ற தொடரில்—இராமபிரான் விட்டு நீங்குதலால் இவ்வயோத்தி நகர் பாழ்பட்டுத் தண்டகாரணியம் போலாய்விடுமென்பதும், இதுகாறும் பாழ்பட்டிருந்த அவ்வனம் இராமபிரான் சென்று சேர்தலால் பல வளங்களும் நிரம்பிச் செழித்துக் குளிர்ந்து வாழ்வதற்கு இனிய இடமாகுமென்பதும் தோன்றும். மற்றும் பலவகைவிசேஷப் பொருள்களுமிங்குக் காணத்தக்கன். .... (448)

(இதுவுமது)

201\. பின்னும்பகர்வாள் மகனேயிவன் பின்செல்தம்பி, யென்னும்படியன்று அடியாரினிலேவல்செய்தி
மன்னும்நகர்க்கே யிவன்வந்திடில் வாவதன்றேல், முன்னம்முடியென்றனள் வார்விழிசோர நின்றாள். 449

| | | | |
|---|---|---|---|
| பின்னும் பகர்வாள் | சுமித்திரை மேலும் கூறுபவளாய் | இவன் | இவ்விராமன் |
| மகனே | 'லக்ஷ்மணனே! | மன்னும் நகர்க்கே வந்திடின் வா | அயோத்திநகர்க்கே மீண்டு வந்தால் கூடவா; |
| இவன் பின் செல் | இவ்விராமன் பின்னே போ; | அது அன்று ஏல் | அப்படியல்லாமற் போனால் |
| தம்பி என்னும் படி அன்று | பார்ப்பவர்கள் தமையன் பின்னே தம்பி போகிறுனென்று சொல்லும் படியாகவல்லாமல் | முன்னம் முடி | அவனுக்கு முன்னமே, உயிரைத் துறந்துவிடு |
| அடியாரினில் ஏவல் செய்தி | அடியார்களைப்போல் பணிவிடை செய்துகொண்டு போ; | என்றனள் | என்று சொன்னவளாகி |
| | | வார்விழி சோர நின்றாள் | நீண்ட கண்களினின்று கண்ணீர் பெருகநின்றாள். |

* * *—'முன்னம் முடி' என்றதன் கருத்தாவது—காட்டில் எப்போதாவது இராமனுக்கு ஏதேனும் ஆபத்து வருமென்று தோன்றினால் நீ உன்னைக்காத்துக் கொள்வதில் ஊக்கமின்றிக்கே அவனுடைய ஆபத்தைத் தடுக்குமாறு உன்னுயிரைக் கொடுக்கவேண்டிவந்தாலும் கொடு. என்பதாம். 'இராமனுக்கு ஆபத்து நேருமாயின்' என்கிற அஸம்பாவிதமான வார்த்தையைக் கூறுதற்குக் கூசி 'அதன்றேல்' என்றாளென்க. .... .... .... .... (449)

(வசிட்டமுனிவன் ஊழ்விதியின் வலிமை என்னே யென்று வியத்தல்)

202, வாழ்வினை நுதலிய மங்கலத்துநாள், தாழ்வினை யதுவரச் சீரை சாத்தினுன்
சூழ்வினை நான்முகத்தொருவர் சூழினும், ஊழ்வினையொருவரா லொழிக்கற்பாலதோ ? 461

| | | | |
|---|---|---|---|
| வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள் | முடிபுனைந்து வாழ்வதற்குக் குறித்த சுபதினத்தில் | சூழ் வினை | விடாது தொடர்ந்து சூழ்ந்திடுகின்ற தீவினைப் பயனுனது |
| தாழ் வினை அது வர | தீவினை வந்துசேர | நான் முகத்து ஒருவர் சூழினும் | பிரமதேவனைச் சூழ்ந்திட்டாலும் |
| சீரை சாத்தினுன் | (இராமன் மகுடாபிஷேக மொழிந்து) மரவுரிதரித்தனன் ; | ஊழ் வினை ஒருவரால் ஒழிக்கல் பாலதோ | அவ்வூழ்வினை ஒருவரால் நீக்குதற்குரியதோ ? |

நகர் நீங்குபடலம் முற்றிற்று.

---

# 5. தைலமாட்டு படலம்

இராமன் காட்டுக்குப் புறப்பட்டுப் போயினன்; சுமந்திரன் தேரிலேற்றிக் கங்கைக்கரை வரையில் கொண்டுபோய் விட்டு வெறுந்தேரோடு திரும்பினன் என்று கேட்டு உயிர்துறந்த சக்ரவர்த்தியினுடம்பை, மாதுலக்ருஹம் சென்றிருந்த பரதசத்ருக்னர்கள் வருமளவும் கெடாமலிருக்குமாறு தைலத்திலிட்டு வைத்திருந்ததைக் கூறும் படலமிது. .... .... .... .... *

(கணவனையிழந்த கோசலை புலம்பல்)

203, தானேதானே தஞ்சமிலாதான் தகைவில்லான், போனுன்போனு னெங்களைநீத்திப் பொழுதென்னு
வானீர்சுண்டி மண்ணறவற்றி மறுகுற்ற, மீனேயென்ன மெய்தடுமாறி விழுகின்ருள். 601

| | | | |
|---|---|---|---|
| தஞ்சம் இலாதான் | தாழ்வில்லாதவனும் | என்னு | என்று கூறி |
| தகை வில்லான் | பெருமை சான்ற வில்லை யுடையவனுமாகிய சக்ரவர்த்தி | வான் நீர் சுண்டி | வானின்று பெய்யும் மழை நீருமின்றி |
| இப்பொழுது எங்களை நீத்து | இப்போது எங்களை விட்டிட்டு | மண் அற வற்றி | பூமியிலுள்ள நீரும் அடியோடு வற்றியதனுல் |
| தானே தானே போனுன் போனுன் | ஒரு வியாதியு மில்லாமலே தானே இறந்திட்டான் ; | மறுகு உற்ற | நிலைதடுமாறிய |
| | | மீனே என்ன | மீன்போல |
| | | மெய் தடுமாறி விழுகின்ருள் | உடம்பு தடுமாறி விழுந்தனள் கோசலை. |

(இதுவும் கோசலை புலம்பல்)

204. நோயும்மின்றி நோன்கதிர்வாள்வே லிவையின்றி, மாயுந்தன்மை மக்களினுலோ மறமன்னன்
ஏயும்ஞெண்டு மிப்பியுமாகங் களிவாழை, வேயும்போன்ரு னென்று மயங்கா விழுகின்ருள். 603

* * *—(உலகில் மரணமடைவதற்கு ஹேதுவான) வியாதியொன்று மில்லாமலும், வாட்படை வேற்படை படுதலில்லாமலும் மரணத்தையடையக் கூடியநிலை பெற்ற புத்திரரால் நேர்வதோ? இது என்ன அநியாயம்!; சக்ரவர்த்தி தான்கொண்ட கருவினுல்தானே அழியும் விஷயத்தில் நண்டையும் முத்துச் சிப்பியையும் வாழையையும் மூங்கிலையுமொத்தான் அந்தோ ! ....

(இதுவும் கோசலை புலம்பல்)

205. வடித்தாழ்கூந்தல் கேகயன்மாதே மதியாலே, பிடித்தாய்வையம் பெற்றனை பேராவர மின்னே
முடித்தாயன்றே மந்திரமென்றாள், முகில்வாய்மின் துடித்தாலென்ன மன்னவன்மார்பில் துவள்கின்றாள்.

கோசலை சக்ரவர்த்தியின் மார்பில் விழுந்து புரண்டு புலம்பும்போது 'அடி கைகேயீ! நீ நல்ல தந்திரஞ்செய்து, மாறுகூற முடியாதவரமென்ற ஒன்றைப் பற்றி ராஜ்யத்தைக் கைப்பற்றி எடுத்த காரியத்தை நன்கு முடித்தாயென்றாள்.

தைலமாட்டு படலம் முற்றிற்று.

---

# 6. கங்கைப்படலம் (அல்லது) குகப்படலம்

காட்டுக்கெழுந்தருளின இராமபிரான் சிருங்கிபேரபுரத்திலிருந்த வேடர் தலைவனை குகனைத் தோழனாக்கொண்டு அவனுதவியினால் கங்கையைக் கடந்தது, அப்பால் சென்றது முதலான கதைகள் இப்படலத்திற் கூறப்பட்டுள்ளன. *

(ராமலக்ஷ்மணஸீதைகள் மூவரும் செல்வதைச் சொல்லுதல்)

206. வெய்யோனொளி தன்மேனியின் விரிசோதியின் மறையப்,
பொய்யோவெனு மிடையாளொடு மிளையானொடும் போனான்
மையோ மரகதமோ மறிகடலோ மழைமுகிலோ,
ஐயோவிவன் வடிவென்பதோ ரழியாவழகுடையான். 625

| | | | |
|---|---|---|---|
| இவன் வடிவு ஐயோ | 'இவனது திருமேனியின் நிறம் ஹா ஹா! | வெய்யோன் ஒளி தன் மேனியின் விரிசோதியின் மறைய | ஸூரியனுடைய வொளியாகிய வெய்யில் தன் திருமேனியினின்று வெளிப்பரவுகின்ற காந்தியினுள்ளே மறைந்திட |
| மையோ | அஞ்சனமோ? | | |
| மரகதமோ | மரகதப்பச்சையோ? | | |
| மறி கடலோ | அலையெறிகின்ற கடலோ! | | |
| மழை முகிலோ | மழை பெய்ய நின்ற மேகமோ! | பொய்யோ எனும் இடையாளோடும் | இல்லையோ வென்னும்படி நுட்பமான இடையைக் கொண்டவளான ஸீதாபிராட்டியோடும் |
| என்பது | என்று பலவாறு உல்லேகம் செய்யத்தக்க | | |
| ஓர் அழியா அழகு உடையான் | ஒப்பற்ற மாறாத அழகு படைத்த இராமன் | இளையானொடும் | இலக்குமணனோடுங் கூட |
| | | போனான் | நடந்துசெல்வானாயினன். |

(இராமன் சீதையுடனே தான்செல்லுங்காட்டில் காணும் அதிசயம்)

207. மாகந்தமு மகரந்தமு மளகந்தரு மதியின், பாகந்தரு நுதலாளொடு பவளந்தருமிதழான்
மேகந்தனி வருகின்றது மின்னோடென மிளிர்பூண், நாகந்தனி வருகின்றது பிடியோடென நடவா. 628

| | | | |
|---|---|---|---|
| மா கந்தமும் மகரந்தமும் அளகம் தரு | மிக்கஸுகந்தத்தையும் மகரந்தத்தையுங் கொண்ட கூந்தலால் பெறப்பட்ட | மிளிர் பூண் மேகம் மின்னோடு தனி வருகின்றது என | விளங்குகின்ற ஆபரணங்களை யணிந்த மழைமுகில் மின்னலோடு சேர்ந்து தனித்து வருகின்றது போலவும் |
| மதியின் பாகம் தரு | சந்திரனது துண்டத்தையொத்த | | |
| நுதலாளொடு | நெற்றியையுடையளான ஸீதையோடு | நாகம் பிடியோடு தனி வருகின்றது என | ஆண்யானை தன் பேடையோடு தனித்து வருகின்றது போலவும் |
| பவளம் தரும இதழான் | பவழத்தையொத்த அதரத்தையுடையனான இராமன் | நடவா | கால்களினால்நடந்துசென்று |

**208.** தொளைகட்டிய கிளைமுட்டிய சுருதிச்சுவையமுதின், கிளைகட்டிய கருவிக்கிள ரிசையிற்பசைநறவின்
விளைகட்டியின் மதுரித்தெழு கிளவிக்கிளி விழிபோல், களைகட்டவர் தளைவிட்டெறி குவளைத்தொகை
கண்டான். 629

| | | | |
|---|---|---|---|
| தொளை கட்டிய கிளை முட்டிய சுருதி சுவை அமுதின் | தொளைபொருந்திய வேய்ங் குழலிலிருந்து வாய்க் காற்று தாக்கியெழுப்பிய இசையாகிய அமுதம் போலவும் | மதுரித்து எழு கிளவி கிளி | இனிமையைப்பெற்று உண்டாகின்ற பேச்சையுடைய கிளிபோன்றவளான சீதாபிராட்டியினுடைய |
| கிளை கட்டிய கருவி கிளர் இசையின் | நரம்புகட்டப்பெற்ற கருவியாகிய வீணையினின்று எழுகிற இசைபோலவும் | விழி போல் | கண்களைப்போன்றுள்ள |
| பசை நறவின் | பசுந்தேன் போலவும் | களை கட்டவர் தளை விட்டு எறி குவளை தொகை கண்டாள் | களைபிடுங்குபவர் வயலினின்று விட்டெறிகின்ற குவளைமலரின் தொகுதியைக் கண்டாள். |
| விளை கட்டியின் | கரும்புரஸத்தினின்று விளைகின்ற பாகுக்கட்டிபோலவும் | | |

* * *—இராமபிரான் சீதாபிராட்டியின் கண்களைப்போல் காட்சி தருகின்ற குவளை மலர்த்தொகையைக் கண்டானென்பதைத் தெரிவிப்பது இச்செய்யுளுக்கு முக்கியம். சொற்செறிவு வியக்கத்தக்கது. .... .... 129

(பிராட்டி அஞ்சாமல் எதையும் அதிசயமாகவே கண்டாளென்பது கூறல்)

**209.** அரும்பேந்திய கலசத்துணை யமுதேந்தியமதமா, மருப்பேந்திய வனமாமுலை மழையேந்தியகுழலாள்
கருப்பேந்திர முதலாயின கண்டாளிடர்காணாள், பொருப்பேந்திய தோளானொடு விளையாடினள் போனாள்.

| | | | |
|---|---|---|---|
| அரும்பு ஏந்திய கலசம் துணை | அரும்பைத் தன்னிடத்துக் கொண்டுள்ள இரண்டு பொற்கலசங்களோ! (அல்லது) | மழை ஏந்திய குழலாள் | மேகத்தையொத்த கூந்தலையுடையளான சீதாபிராட்டி |
| அமுது ஏந்திய மதம் மா மருப்பு | இனிமையைக் கொண்டுள்ளனவும் மதயானையினிடத்துத் தோன்றியுள்ளனவுமான இரண்டு தந்தங்களோ! | பொருப்பு ஏந்திய தோளானொடு | மலையையொத்த திருத்தோள்களையுடைய இராமபிரானோடுகூட(ப் போனதனால்) |
| எனல் ஆம் | என்று சொல்லுதற்குத் தக்கதாக | கருப்பேந்திரம் முதலாயின கண்டாள் இடர் காணாள் | யாளி முதலான பயங்கர ஜந்துக்களைக் கண்டுங்கூட அச்சம் குடிபுகாதவளாய் |
| ஏந்திய முலை | தாங்கிய தனங்களைக் கொண்டுள்ள | விளையாடினள் போனாள் | அவலிலையாகவே நடந்து சென்றாள். |

* * *—இப்பாட்டின் மூன்றாமடி அறிஞர்களால் மிகவுமாராயத் தக்கது. கருப்பேந்திரம் என்றதை 'கரும்பு ஏந்திரம்' என்று பிரித்து, கரும்பாலை முதலியவற்றைக் கண்டவண்ணம் சென்றாளென்று பெரியார் உரையிட்டுள்ளார்கள். இங்குக் குறிக்கொள்ள வேண்டிய விசேஷமுண்டு. வான்மீகி ராமாயணத்தில் "கஜம் வா வீக்ஷ்ய ஸிம்ஹம் வா வ்யாக்ரம் வாபி வராங்கநா, நாஹாரயதி ஸம்த்ராஸம் பாஹூ ராமஸ்ய ஸம்ச்ரிதா" என்றுள்ள சுலோகத்தை யடியொற்றியே கம்பர் இச்செய்யுளை இயற்றியுள்ளார். பிராட்டி காட்டிலே செல்லும்போது யானை சிங்கம் புலி முதலிய கொடிய விலங்குகளைக் கண்டவிடத்தும் சிறிதும் அஞ்சவில்லை; புதிய வஸ்துக்களைக் கண்டதனாலுண்டாகும் வியப்பே அவளுக்குத் தோன்றியது; இராமபிரானுடைய திருத்தோள்களை அண்டை கொண்டமிடுக்குத்தான் இதற்குக் காரணம்—என்பது மேற்குறித்த சுலோகத்தின் கருத்து. இக்கருத்துப்படவே கம்பர் இச்செய்யுளை இயற்றியுள்ளார்.

"பாஹூ ராமஸ்ய ஸம்ச்ரிதா" என்றதற்குச் சேர "பொருப்பேந்திய தோளானொடு போனாள்" என்றார். "நாஹாரயதி ஸம்த்ராஸம்" என்றதற்கு "இடர் காணாள்" என்றார். இடர்காணாள் என்பதற்கு—பயப்பட்டிலள் என்பதே கருத்து. கருப்பேந்திரம் என்பதற்குக் கரும்பாலையென்று பொருள் கூறுவதில் சுவையில்லையே: கரும்பாலையைக் கண்டால் அஞ்சுதற்கு ப்ரஸக்தியில்லையாயிருக்க, அதுகண்டு இடர்காணாளென்பதில் பொருத்தமில்லையே. வடமொழி நிகண்டு ஒன்றில் "கர்ப்பேந்த்ரஸ் ஸிம்ஹபக்ஷக:" என்றுள்ளது; சிங்கத்தைக் கொன்று தின்னவல்ல யாளியே இங்குக் கருப்பேந்திரமெனப்பட்டது. வான்மீகி முனிவர் காட்டில் காணப்பட்ட பயங்கர ஜந்துக்களில் சிங்கத்தோடு நிறுத்தினார்; கம்பர் அதற்கு மேலும் ஒருபடி சென்றார் என்ற சிறப்புமுணரத்தக்கது. 630

(குஹப்பெருமாளை நோக்கி இராமபிரான் கூறியமொழி)

**210.** அரியதா முவப்ப வுள்ளத் தன்பினு லமைந்தகாதல்
தெரிதரக் கொணர்ந்தவென்றால் அமிர்தினுஞ் சீர்த்தவன்றே
பரிவினில் தழீஇயவென்னில் பவித்திர மெம்மனோர்க்கும்
உரியன வினிதின்நாமும் உண்டனெ மன்றோவென்றான்.

| | |
|---|---|
| | (குகன் தான் கொணர்ந்த காணிக்கைப் பொருள்களைத் தெரிவித்தான் கிழ்;) (நீ கொணர்ந்த இந்தக் காணிக்கைப்பொருள்கள்) |
| உள்ளத்து அன்பினால் அமைந்த காதல் | மனத்தினுள்ளே யிருக்கின்ற அன்பு முதிர்தலால் தோன்றும் பக்தியானது |
| தெரிதர | யாவர்க்கும் புலப்படுமாறு |
| உவப்ப கொணர்ந்த | மனமுவப்பக் கொண்டுவந்தனவாகும்; |
| என்றால் | என்று சொல்லுமளவில், |
| அரியதாம் | கிடைத்தற்கு அருமையான |
| அமிர்தினும் சீர்த்த அன்றே | அமுதத்திற் காட்டிலும் சிறந்தனவுமாகு மன்றோ? |
| | (கொண்டுவந்த பொருள்கள் எப்படிப்பட்டனவாக இருந்தாலும்) |
| பரிவினில் தழீஇய என்னில் | அன்போடு பொருந்தியவை யாயின் |
| பவித்திரம் | அவை பரிசுத்தமான பொருள்களே; |
| | (அவை) |
| எம் அனோர்க்கும் | எம்போன்றவர்களுக்கும் |
| உரியன | அங்கீகரிக்கத்தக்கவை; (ஆதலால்) |
| இனிதின் நாமும் உண்டனெம் அன்றோ என்றான் | இனிமையாக நாம் உண்டதற்குச் சமானமேயாகு மன்றோ வென்றான். |

(நீ இன்று சுற்றத்தாரோடும் உன்னிருப்பிடஞ்சேர்ந்து விடியற்காலை நாவாயோடு, வருகவென்று இராமனாற் கூறப்பட்ட குகன் இராமனது தவக்கோலத்தைக் கண்டு வருந்தி நானுன்னைப்பிரியாது அடிமைசெய்வேனெனல்)

**211.** கார்குலா நிறத்தான் கூறக் காதல னுணர்த்துவான்இப்
பார்குலாஞ் செல்வ! நின்னை யிங்ஙனம்பார்த்தகண்ணை
ஈர்கிலாக் கள்வனேன்யான் இன்னலினிருங்கைநோக்கித்
தீர்கிலேனைய ! செய்குவே னடிமையென்றான். 669

| | |
|---|---|
| கார் குலாம் நிறத்தான் | மேகவண்ணனான இராமன் |
| கூற | (இன்று உன்னிருப்பிடம் போய் நாளை ஓடத்தோடும் வருகவென்று) சொன்னவளவிலே |
| காதலன் | அன்பனான குகன் |
| உணர்த்துவான் | பின்வருமாறு தன் கருத்தைத் தெரிவிப்பானாயினன்; |
| இப்பார் குலாம் செல்வ | இவ்வுலகம் முழுவதும் கொண்டாடுகின்ற செல்வனே! |

| | |
|---|---|
| நின்னை இங்வனம் பார்த்த கண்ணை | உன்னை இப்படி தவக்கோலத்தோடு கண்ட என் கண்களை |
| ஈர்கிலா | பிடுங்கி யெறியமாட்டாத |
| கள்வனேன் யான் | கபடபக்தியுடைய யான் |
| இன்னலின் இருக்கை நோக்கி | உனக்கு நேர்ந்துள்ள துன்ப நிலையை நோக்கி |
| தீர்கிலேன் | உன்னைவிட்டுப் பிரிந்து செல்லத்துணிகின்றிலேன் ; |
| ஐய | பிரானே ! |
| ஆவ அடிமை செய்குவென் என்றான் | என்னாலான தொண்டுகளை உனக்குச் செய்துகொண்டு இங்கேயே யிருப்பேனென்றான். |

* * *—குகனிடத்துப் பேரன்புகொண்ட இராமன் அவனை நோக்கி 'இப்போது நீ இருப்பிடஞ் செல்லுக' வென்றது உண்மையான கருத்துடன் அல்ல; இவனுடைய பிரிவாற்றாமையைத் தெரிந்து கொள்வோமென்றெண்ணியே. 669

(இராமன் குகனுக்கு அங்ஙனமே அனுமதியளித்தல்)

212. கோதைவிற் குரிசிலன்னான் கூறிய கோள்கைகேட்டான்
சீதையை நோக்கித் தம்பி திருமுகநோக்கித் தீராக்
காதலனாகுமென்று கருணையின் மலர்ந்தகண்ணன்
யாதினுமினிய நண்ப ! இருத்தியீண்டெம்மொடென்றான். 670

| | |
|---|---|
| கோதை வில் குரிசில் | வெற்றிமாலைசூடியகோதண்டபாணியான இராமன் |
| அன்னான்கூறிய கோள்கை கேட்டான் | அந்தக் குகன் கூறிய அவனது கருத்தைக் கேட்டு (பிறகு) |
| சீதையை நோக்கி தம்பி திருமுகம் நோக்கி | சீதையின் முகத்தைப் பார்த்தும் லக்ஷ்மணனது முகத்தைப் பார்த்தும் |
| தீரா காதலன் ஆகும் என்று | இவன் நம்மிடத்து அசஞ்சலமான பக்தியுடையவனென்று சொல்லி |
| கருணையின் மலர்ந்த கண்ணன் | கருணையினால் மலர்ந்த திருக்கண்களை யுடையவனாய் |
| யாதினும் இனிய நண்ப | எல்லாப் பொருளினும் மேம்பட்டதான நட்பையுடையவனே ! |
| | (இன்றைத்தினம்) |
| ஈண்டு எம்மொடு இருத்தி என்றான் | இவ்விடத்தில் எம்முடனே இருவென்றான். |

(லக்ஷ்மணன் நித்திரையை நீத்தமை கூறுதல்)

213. வெயில்விரி கனகக்குன்றத் தெழில்கெட விலகுசோதிக்
கயில்வரி வயிரப்பைம்பூண் கடுதிறல் மடங்கலன்னான்
துயிலெனு மணங்குவந்து தோன்றலு மவளைநாமே
எயிலுடை யயோத்திமூதூ ரெய்துநா ளெய்துமென்றான். 676

| | |
|---|---|
| வெயில் விரி கனகம் குன்றத்து | சூரியனொளி பரவுதற்குக் காரணமான மேருமலையினது |
| எழில் கெட | அழகு கெடும்படி |
| விலகு சோதி | விட்டுவிட்டுப் பிரகாசிக்கின்ற ஒளியையுடைய |
| கயில் வரி வயிரம் பைம் பூண் | அழகிய ஸுவர்ணாபரணங்களைப் பூணுதற்கு உரியனான |
| கடு திறல் | மிக்கவலிமைகொண்ட |
| மடங்கல் அன்னான் | சிங்கத்தையொத்த லக்ஷ்மணன், |
| துயில் எனும் அணங்கு மாது வந்து தோன்றலும் | நித்திரையென்னும் மாது வந்து தோன்றியவளவிலே |
| அவளை | அந்த மாதை நோக்கி |
| எயில் உடை அயோத்தி மூது ஊர் நாம் எய்தும் நாள் | மதிலையுடைய அயோத்யா நகரியை நாம் மீண்டுவந்து சேர்கின்ற காலத்தில் |
| எய்தும் என்றான் | நீர் நம்மிடம் வந்து சேர்கவென்று கட்டளையிட்டான். |

214. மறக்கண்வா ளிளையவீர னாணையை மறுத்தல்செல்லா, உறக்கமா மாதுமண்ணலுபயபங்கயங்கள் போற்றித்
துறக்கமா மென்னலாய தாய்மதி லயோத்தியெய்தி, இறுக்குநா ளெந்தைபாத மெய்துவ னென்று
போனாள். 676

| | | | |
|---|---|---|---|
| மறம் கண் வாள் இளைய வீரன் | வீரத்தைத் தன்னிடத்தே கொண்ட வாட்படையை யுடைய லக்ஷ்மணனது | துறக்கம் ஆம் என்னல் ஆய தாய் மதில் அயோத்தி எய்தி | 'ஸ்வர்க்கம்போலு மென்று சொல்லத்தக்க அழகிய மதிள் சூழ்ந்த அயோத்தி நகரை யடைந்து |
| ஆணையை மறுத்தல் செல்லா | கட்டளையை மறுக்கமாட்டாத | இருக்கும் நாள் | தங்குகின்ற நாளில் |
| உறக்கம் ஆம் மாதும் | நித்திரையாகிய தெய்வப் பெண்ணும் | எந்தை பாதம் எய்துவன் என்று போனாள் | உனது திருவடிகளை வந்து கிட்டுவேன்' என்று சொல்லிப் போனாள். |
| அண்ணல் உபயம் பங்கயங்கள் போற்றி | லக்ஷ்மண ஸ்வாமியினது உபய பாதாரவிந்தங்களை வணங்கி வாழ்த்தி | | |

***—மானிடர்க்கு உரிய நித்திரை லக்ஷ்மணனுக்கும் வந்து தோன்றத் தொடங்க, இலக்குமணன் அந்த நித்ராதேவதையை நோக்கி 'வனவாஸம் முடியுந்தனையும் அத்தாணிச்சேவகத்திலீடுபட்டிருக்குமென்பால் வந்து சேராதே' என்று கட்டளையிட, அவளும் அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு 'அங்ஙனமே யாகுக' என்று விண்ணப்பஞ்செய்து அகன்றாள்—என்னுமிந்த வர்ணனையினால் இளையோன் நித்திரையும் சோம்பலுமின்றிப் பெருமாளுக்குத் தொண்டு செய்யச் சங்கற்பித்துக் கொண்டானென்றதாயிற்று .... .... 676

## (இளையோன் கையும் வில்லுமாய்க் காத்திருத்தல்)

215. மற்றவ ளிறைஞ்சியேக மாமலர்த்தவிசு நீங்காப், பொற்றொடியோடு மையன் துயில்தரும் புன்மைநோக்கி
இற்றதோர் நெஞ்சனாகி இருகண் நீரருவிசோர, உற்ற ஓவியமதென்ன ஒருசிலை யதனினின்றான். 677

| | | | |
|---|---|---|---|
| மற்றவள் இறைஞ்சி ஏக | (கீழ்க் கூறியவாறு) அந்த நித்திரா தேவி வணங்கிச் சென்றபின் | இற்றது ஓர் நெஞ்சன் ஆகி | மிகவருந்திய மனத்தையுடையனாய் |
| மா மலர் தவிசு நீங்கா பொன் தொடியோடும் | தாமரைமலராகிய ஆசனத்தை விட்டு நீங்காத லக்ஷ்மியின் தோற்றமாகிய ஸீதாதேவியோடு | இரு கண் நீர் அருவி சோர | தனது இரண்டு கண்களினின்றும் அருவிபோல நீர் பெருக, |
| ஐயன் | இராமபிரான் | உற்ற ஓவியம் அது என்ன | துன்ப நிலையோடு தோன்றுகின்ற சித்திரம் போல அசையாது. |
| துயில்தரும் புன்மை நோக்கி | திருக்கண்வளர்கின்ற சிறுமையைக்கண்டு | ஒரு சிலை அதனின் | தனது ஒப்பற்ற சிலையோடும் |
| | | நின்றான் | இராமனைப் பாது காத்து நின்றான். |

## (குகனும் தன் பரிவாரங்களுடன் இராமனை இரவுமுழுதும் காத்திருத்தல்)

216. தும்பியின் குழாத்திற்சுற்றுஞ் சுற்றத்தன் தொடுத்தவில்லன்
வெம்பிவெந் தழியாநின்ற நெஞ்சினன் விழித்தகண்ணன்
தம்பிநின்றானை நோக்கித் தலைமகன் தன்மைநோக்கி
அம்பியின் தலைவன் கண்ணீரருவிசோர் குன்றின்நின்றான். 678

| | |
|---|---|
| அம்பியின் தலைவன் | ஓடங்களை வைத்திருக்கும் தலைவனாகிய குகன் |
| தும்பியின் குழாத்தில் சுற்றும் சுற்றத்தன் | யானைத் தொகுதிபோல் சுற்றிக்கொண்டுள்ள இனத்தாரை யுடையவனாய்க் கொண்டு, |
| தொடுத்த வில்லன் | நாணேறிட்ட வில்லையுடையவனும் |
| விழித்த கண்ணன் | இமைகொட்டாத கண்களையுடையவனும் |
| வெம்பி வெந்து அழியா நின்ற நெஞ்சினன் | வருந்திக் கொதித்து நிலைகுலைந்த மனத்தையுடையவனும் |
| விழித்த கண்ணன் | கண்ணை மூடாதவனுமாகிய |
| தம்பி நின்றானை நோக்கி | நிற்கின்ற தம்பியைப் பார்த்து [தம்பி நிற்பதையும் பார்த்து] |
| தலைமகன் தன்மை நோக்கி | ராஜ குமாரனாகிய இராமன் தரையிற்படுத்திருப்பதையும் பார்த்து |
| கண் நீர் | கண்ணீர்ப் பெருக்குடனே |
| அருவி சோர் குன்றின் நின்றான் | நீர்அருவி பெருகாநின்றதொரு மலையையொத்து நின்றான். |

* * *—"இளையபெருமாளை ஸ்ரீகுஹப்பெருமாள் அதிசங்கைபண்ண, இருவரையும் அதிசங்கைபண்ணி ஸ்ரீகுஹப்பெருமாள் பரிகரம் பெருமாளை நோக்கிற்றிறே: ஒருநாள் முகத்திலே விழித்தவர்களை வடிவழகு படுத்தும் பாடாயிற்று இது" என்கிற ஸ்ரீவசனபூஷண சூர்ணைகளும், அவ்விடத்து மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளும் இங்கு நோக்கத்தக்கன.

**(கங்கை கடந்து அக்கரையேறியபின்பு இராமன் குகனோடு தோழமை பாராட்டுதல்)**

**217.** அன்னவ னுரைகேளா வமலனு முரைநேர்வான், என்னுயி ரனையாய்நீ இளவலுமினையான்இந்
நன்னுதலவள் நின்கேள் நளிர்கடல் நிலமெல்லாம், உன்னுடையது நானுன் தொழிலுரிமையினுள்ளேன்.

| | |
|---|---|
| அன்னவன் உரை கேளா | அந்தக்குகன் (தன்னையும் கூடவே வைத்துக்கொள்ளுமாறு வேண்டிச்சொன்ன.) சொல்லை இராமன் கேட்டு |
| அமலனும் உரை நேர்வான் | இராமபிரானும் அதற்கு மறுமொழி கூறுபவனாய் |
| | (குகனை நோக்கி) |
| நீ என் உயிர் அனையாய் | நீ என்னுயிரை யொத்தவன்; |
| இளவல் உன் இளையான் | என் தம்பி உனக்குத் தம்பியாவன். |
| இ நல் நுதலவள் | அழகிய நெற்றியை யுடையவளான இந்தச் சீதை |
| நின் கேள் | உனக்குத் தோழியாவாள். |
| நளிர் கடல் நிலம் எல்லாம் உன் உடையது | குளிர்ந்த கடல் சூழ்ந்த பூமி முழுவதும் உன்னுடைய சொத்தாகும்; |
| நான் உன் தொழில் உரிமையின் உளேன் | நான் உனது ஏவல் தொழிலில் கட்டுப்படும் உரிமையிலடங்கியுள்ளேன். |

**(குகன்நிற்க, இராமன் முதலியோர் வனத்திற் செல்லுதல்)**

**218.** பணிமொழி கடவாதான் பருவர லிகவாதான், பிணியுடை யவனென்னும் பிரிவினன் விடைகொண்டான்
அணியிழை மயிலோடும் ஐயனு மிளையோனும், திணிமர நிரைகானில் சேணுறு நெறிசென்றார். 701

குகன் இராமபிரானிட்ட கட்டளையைக் கடக்கமாட்டாதவனும், இராமபிரானைப் பிரிவதனால் மனத்துன்பம் நீங்கப்பெறாதவனுமாகி, தன்னைக்கண்டவர்கள் 'இவன் ஏதோ பெருத்த நோயைக் கொண்டுள்ளான்' என்று கருதுமாறு தோன்றுகின்ற பிரிவுத்துயரத்தைக் கொண்டவனாய் இராமபிரானிடத்து விடைபெற்றுக் கொண்டான். இராமனும் இளையபெருமாளோடும் சீதாபிராட்டியோடும் கிளைகளடர்ந்த மரங்களை நெருக்கமாகக் கொண்டுள்ள காட்டிலே வெகுதூரமாகச் செல்லுகின்ற காட்டுவழியே சென்றார். .... .... 701

கங்கைப்படலம் முற்றிற்று.



శ్రీమదుభయవే. తిరుకణ్ణపురమ్ పట్టప్పా
స్వాములవారను తిరువేంకటాచార్యస్వాములవారు.
(వైకుంఠవాస్తవ్యులు)

ஸ்ரீமதுபயவே. திருக்கண்ணபுரம்
பட்டப்பாஸ்வாமியென்று ப்ரஸித்த
ரான திருவேங்கடாசார்யஸ்வாமி
(வைகுண்டவாஸி)



श्रीमदुभयवे. अम्मासत्रम्. शेषाचार्य स्वामिनः ।
कुम्भघोणम्. (वैकुण्ठवासिनः)

ஸ்ரீமதுபயவே. அம்மாஸத்ரம்
சேஷாசார்யஸ்வாமி. திருக்குடந்தை
(வைகுண்டவாஸி)



श्रीमदुभयवे. तिरुनांगूरु. प्रतिवादि भयङ्करम्.
पेरिय कृष्णमाचार्य स्वामिनः ।
(तुर्याश्रम स्वीकारेण दिवंगताः)

ஸ்ரீமதுபயவே. திருநாங்கூர் பிரதிவாதி
பயங்கரம் பெரிய க்ருஷ்ணமாசார்ய
ஸ்வாமி. (உத்தமாச்ரமம் ஸ்வீகரித்
திருந்து திருநாடலங்கரித்தவர்)



श्रीमदित्यादि. तिरुनांगूरु. प्रतिवादि भयङ्करम्
चिन्नकृष्णमाचार्य स्वामिनः । (वैकुण्ठवासिनः)

ஸ்ரீமதுபயவே. திருநாங்கூர் பிரதிவாதி
பயங்கரம் சின்னக்ருஷ்ணமாசார்ய
ஸ்வாமி (வைகுண்டவாஸி)



श्रीमदुभयवे. नाच्चियार्कोविल. नडादूरु.
कृष्णमाचार्य स्वामिनः । (वैकुण्ठवासिनः)

ஸ்ரீமதுபயவே. நாச்சியார்கோவில்
நடாதூர் க்ருஷ்ணமாசார்யஸ்வாமி
(வைகுண்டவாஸி)



श्रीमदुभयवे. मण्डयम्. ति. अ. आळ्वार् स्वामिनः । (वैकुण्ठवासिनः)

ஸ்ரீமதுபயவே. மண்டயம் தி. அ. ஆழ்வார்ஸ்வாமி (வைகுண்டவாஸி)



श्रीमदुभयवे. उप्पिलियप्पन् सन्निधि. नवनीतम्.
कृष्णमाचार्य स्वामिनः। (वैकुण्ठवासिनः)

ஸ்ரீமதுபயவே, உப்பிலியப்பன்
ஸந்நிதி நவநீதம் க்ருஷ்ணமாசார்ய
ஸ்வாமி (வைகுண்டவாஸி)



श्रीमदुभयवे. तिरुवहीन्द्रपुरम्. कच्चिकिडाम्बि.
भाष्यकाराचार्य स्वामिनः । (वैकुण्ठवासिनः)

ஸ்ரீமதுபயவே. திருவஹீந்திரபுரம்
கச்சிக்கிடாம்பி பாஷ்யகாராசார்ய
ஸ்வாமி (வைகுண்டவாஸி)

Rgd. No. 2975 ஸ்ரீராமாநுஜன்

கிடைக்குமிடங்கள் :—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

(2) G. ரங்கையா நாயுடு,
26, குருவப்ப செட்டி தெரு, சிந்தாத்ரிபேட்டை, மதராஸ்—2

(இவர் சென்னையில் ப்ரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)



If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.

Sri Vidwan
Vangeepuram Raghava Charya Swami
Melkote
(Mysore)

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kancheepuram.